வெளியீட்டு எண் 274.

73-3

# ஞானபோதம் உரைநடை

## பயனியல்

(10, 11, 12 சூத்திரங்கள்)

## நான்காம் பகுதி



திருவாவடுதுறை ஆதீனம்

1973

உ

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துப்

பிரதம பரமாசாரியர்

ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகமூர்த்திகள்

# மகரத்தலைநாட் குருபூஜை விழாமலர்

பரிதாபி - தை - உஎ - அசுபதி

9—2—1973

அன்பளிப்பு :
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

உ

சிவமயம்

# பதிப்புரை

சிவஞானபோதம் என்னும் செந்தமிழ்த் தலைமணி ஞானநூல், எழுநூற்றைம்பது யாண்டுகளுக்குமுன், திருவெண்ணெய்நல்லூரில், அகவிருள் நீக்கி மெய்ப் பொருள்காட்டும் திருவருட் செங்கதிரவனாக விளங்கி இருந்த மெய்கண்டதேவநாயனாரால் சிவாஞ்ஞை யின்படி அருளிச்செய்யப்பெற்றது; சிறிய ஆடியிற் பெரிய மால்வரைப் பொருள் செறிந்தாங்கு அறிவு நூல்களின் முடிவெலாம் அகப்படுத்து, அவற்றின் நெறியெலாம் விளக்குவது.

திட்பம், நுட்பம், செறிவு, பரப்பு, ஆழம், இனிமை என்னும் இத்தகு பண்புகள் அமைந்த இவ்வுயர்ஞான நூற்பொருளைச் சுருக்கியும் விரித் தும் மொழிபெயர்த்தும் விளக்க எழுந்த பாட்டும் உரையும் ஆகிய நூல்கள் பலப்பல.

அவை எல்லாவற்றுள்ளும் தலைசிறந்தவை, இவ் வாதீனத்தில் இருநூற்றைம்பது யாண்டுகளுக்கு முன் தமிழகத்தின் தவப்பயனாய் விளங்கிய மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிச்செய்துள்ள சிவஞான மாபாடியமும், சிவஞானபோதச் சிற்றுரையும் ஆம் என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்த துணிபு. அவற் றைக் கற்றுணர்தற்கு வாயிலாக, சிவஞானபோதம் உரைநடை என்னும் விளக்கவுரை ஒன்று, இவ் வாதீன வித்துவான் த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை

அவர்களால் எழுதப்பட்டது. அதன் முதல் மூன்று பகுதிகள் சென்ற ஆண்டில் அவர்களாலே பதிப்பிக்கப்பெற்றன. அவர் அண்மையில் இவ்வுலகவாழ்வை நீத்தமையின், அவரால் எழுதி வைக்கப்பெற்ற இறுதிப் பகுதியாகிய 'பயணியல்' இப்பொழுது, இவ்வாதீனப் பிரதம பரமாசாரியர் மகரத்தலைநாட் குருபூசை விழாவில் என்னால் பதிப்பிக்கப்பெற்று வெளிவருகின்றது.

இதனை வெளியிடும்படி கட்டளையிட்டருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுடைய பொன்னார் திருவடிகளை மன மொழி மெய்களால் சிந்தித்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

அன்பர்கள் இவ்வுயரிய உரைநடையை ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் அருளாசியொடு பெற்று, நன்றிக்கடன் பூண்டவர்களாய்க் கற்றுணர்ந்து உயர் நலன் எய்துவார்களாக.

இங்ஙனம்,

திருவாவடுதுறை, 5—2—1973.

**க. வச்சிரவேல் முதலியார்,**
ஆதீன வித்துவான்.



ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள்

சிவமயம்

# முகவுரை

திருச்சிற்றம்பலம்

குறிகளும் அடையாளமும் கோயிலும்
நெறிகளும் அவர்நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியி லீர்மன மென்கொல் புகாததே.

—திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

வேதம் பொது. அது பசுவைப்போன்றது. ஆகமங்கள் சிறப்பு. அவைபசுவினிடத்துப் பால்போன்றன; சிவபிரானுடைய உண்மைத்தன்மையை நன்கு தெளிவிப்பன. வேதாகமங்கள் முழுமுதற் கடவுளாகிய சிவபிரானால் அருளிச் செய்யப்பட்டவை. தேவார திருவாசகங்கள் ஆகிய அருட்பாக்கள் சைவசமயாசாரியர்களாகிய நால்வரால் அருளிச்செய்யப்பட்டவை. அவை பாலினுள்ளுறும் நெய்யை யொத்தன. நெய்யின் உறுசுவையை யொத்தது ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனார் அருளிச்செய்த சிவஞானபோதம். ஸ்ரீ மெய்கண்ட தேவர் சாமுசித்தராய்த் திருவெண்ணெய் நல்லூரிலே திருவவதாரம் செய்தவர்கள். சித்தாந்த சாத்திரங்களில் தலைசிறந்து விளங்குவது சிவஞான போதமே ஆகும்.

சிவஞானபோதம் என்பது சிவத்தை அறிதற்குக் கருவியாகவுள்ள சுத்தாத்துவித சித்தாந்த சைவஞானப் பெருநூலாம். இது பொது, சிறப்பு என்னும் இரண்டு அதிகாரங்களையும், பிரமாணவியல், இலக்கணவியல், சாதனவியல், பயனியல் என்னும் நான்கு இயல்களையும், பன்னிரண்டு சூத்திரங்களையும், முப்பத்தொன்பது அதிகரணங்களையும், எண்பத்தொரு உதாரண வெண்பாக்களையும், மங்கலவாழ்த்து அவையடக்கம் ஆகிய இரண்டு செய்யுட்களையும் உடையது.

பதிபசு பாசங்களாகிய முப்பொருள் ஆராய்ச்சியே சிவஞானபோதத்துள் செய்யப்படும். முதல் ஆறு சூத்திரங்கள் பதி பசு பாசங்களின் பொது இயல்பைக் கூறுவன. பின் ஆறு சூத்திரங்கள் அம்முப்பொருள்களின் சிறப்பியல்பைக் கூறுவன. முன்னாறும் பொது அதிகாரம் எனவும், பின்னாறும் உண்மை அதிகாரம் எனவும் கூறப்படும். பதிக்குப் பொது இயல்பு உயிர்களோடு ஒன்ருயும், வேருயும், உடனுயும் நிற்றலாம்; சிறப்பியல்பு சச்சிதானந்தமாய் நிற்றலாம். பசுவுக்குப் பொது இயல்பு கருவிகரணங்களுடன் கூடி நிற்றல்; சிறப்பியல்பு கருவிகளினின்று நீங்கி உடனுய் நிற்கும் சிவமயமாய் நிற்றல். பாசத்துக்குப் பொது இயல்பு காரியரூபமாய் நிற்றல்; சிறப்பியல்பு காரணரூபமாய் நிற்றலாம்.

காணப்படும் உலகத்திற்குக் கடவுள் உண்டு என்றல் பொது; அக்கடவுள் சிவமென்றல் சிறப்பாம். சிறப்பு வகையால் முதற்கடவுளாகிய 'சிவம் உண்டு என்று கூறுவது ஆகமப்பிரமாணம். அதனை வலியுறுத்துவது அனுமானப் பிரமாணமாம் என்க.

ஆராய்ச்சி அறிவால் அறிவது பொதுவும், அநுபவ அறிவால் அறிவது சிறப்புமாம். அன்றியும் பொது இயல்பு தூலநிலையும், சிறப்பியல்பு சூக்குமநிலையுமாம். இவை முறையே தடத்த நிலையும் சொரூப நிலையும் எனினும் பொருந்தும். பதிக்குப்பொது இயல்பு உயிர்களோடு அத்துவிதமாய்க் கலந்திருத்தல்; சிறப்பியல்பு சச்சிதானந்த மயமாய் நிற்றல் என அறிக.

பொது அதிகாரத்தில் பிரமாண இயலினுல் முப்பொருளுண்மை (அதாவது பதி பசு பாசம் என்னும் முப்பொருள் உண்டு என்பது) சாதிக்கப்பட்டது. இலக்கண இயலினுல் முப்பொருளின் இலக்கணம் கூறப்பட்டது.

உண்மை அதிகாரத்தில் சாதன இயலினுல் அம் முப்பொருள்களுள்ளும் விலக்கவேண்டியதை விலக்கி அதனுல் வரும் துன்பத்தினின்றும் நீங்குதலும், கொள்ளத் தக்கதைக் கொண்டு அதனுல் வரும் இன்பத்தை அடைதலும் ஆகிய பயன் பெறுவதற்கு ஏதுவாகிய சாதனம் செய்யுமாறு கூறப்பட்டது. பயனியலில் பாசவீடும் சிவப்பேறுமாகிய பயனியல்பு கூறப்பட்டது.

இனி, சிவஞான போதச் சூத்திரம் ஒவ்வொன்றும் அதிற் கூறப்பட்ட விடயங்களுக்கேற்ப அதிகரணங்களாக வகுக்கப்பட்டுள்ளது.

"தன்னுற் கூறப்படும் பொருள், அதன்கண் ஐயப்பாடு, அதற்குப் பிறர்கூறும் பக்கம், அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத்துணிபு, இயைபு ஆகிய

இவ்வைந்தின் நிலைக்களம் ஈண்டு அதிகரணம் எனப்படும்''.

இவற்றுள், 'தன்னுற் கூறப்படும் பொருள்' என்பது அதிகரணத்தில் சொல்லப்பட்ட விடயம். 'அதன்கண் ஐயப்பாடு' என்பது அவ்விடயத்தில் தோன்றும் சந்தேகம். 'அதற்குப்பிறர் கூறும் பக்கம்' என்பது அச்சந்தேகத்தால் பிறசமயிகள் கூறும் ஆட்சேபனைகள். 'அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபு' என்பது பிறசமயிகள் செய்யும் ஆட்சேபனைகளில் உள்ள குற்றங்களை எடுத்துக்காட்டி அவைகளை மறுத்துச் சித்தாந்தப்படுத்திய துணிபு. 'இயைபு' என்பது சித்தாந்தப்படுத்திக்காட்டிய துணிபுகளைப் பிரமாணங்களாலும் திட்டாந்தங்களாலும் வலியுறுத்தல் என அறிக.

அதிகரணம் ஒவ்வொன்றுக்கும் சூர்ணிகை என்னும் கருத்துரையும், வார்த்திகம் என்னும் பொழிப்புரையும், உதாரண வெண்பாக்களும் கொண்டு பொருளுரைக்கப்படும்.

இனி, சிவஞானபோதம் உரைநடையின் முதற் பகுதி பிரமாணவியல் (1, 2, 3 சூத்திரங்கட்கு மட்டும்) ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக பரமாசாரிய மூர்த்திகள் மகரத் தலைநாட் குருபூசையில் (23—1—1972ல்) வெளியிடப் பெற்றது. இரண்டாம் பகுதியாகிய இலக்கண இயல் (4, 5, 6 சூத்திரங்களுக்கு மட்டும்) திராவிட மாபாடிய கர்த்தராகிய ஸ்ரீமாதவச்சிவஞானயோகிகள் (188-வது) குருபூசையில் (22—4—1972ல்) வெளியிடப்பெற்றது. மூன்ரும் பகுதியாகிய சாதன இயல் (7, 8, 9 சூத்திரங்

களுக்கு மட்டும்) ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக பரமாசாரிய மூர்த்திகள் நிறைபணி விழாவில் (25—9—1972ல்) வெளியிடப்பெற்றது. எஞ்சி நின்ற நான்காம் பகுதி யாகிய பயனியல் (10, 11, 12 சூத்திரங்கள்) இப் பொழுது வெளிவரத் திருவருளும் குருவருளும் துணை நின்றன. முன்புவெளிவந்த 1-9 சூத்திரங்களின் உரை நடை சைவ மெய்யன்பர்கட்குப் பெரும்பயன் விளை வித்ததுபோலவே இந்த நான்காம் பகுதியும் பெரும் பயனைத் தருவதாம் என்னும் துணிபு மிகவுடையேன்.

இனி, இப்பொழுது வெளிவரும் பயனியலில் முதலாவதாக அமைந்துள்ள 10-ம் சூத்திரம் ஞான சாதனத்தால் உண்டாம் பாசவிடுதியும் சிவப்பேறும் என்னும் பயன் இரண்டனுள் பாசவிடுதி கூறுவது. இச்சூத்திரம் இரண்டு அதிகரணங்களை உடையது. அவற்றுள் முதலதிகரணம் ஞானக்கண்ணால் பதியைக் காண்டலே முத்தியென்னும் சிவசமவாத சைவரை மறுத்து, சிவபெருமானோடு ஏகமாய் நிற்கவேண்டும் எனவும், இரண்டாம் அதிகரணம் உடம்பு நிற்கும் அளவும், வினைப்பயனையும் முயற்சியினையும் நீக்குதல் கூடாமையின், அவ்விரண்டும் ஏகனாய் நிற்றற்குத் தடையாகும், அந்தத் தடையைக் கடக்கமுடியாது என்னும் சுத்தசைவர் முதலாயினாரை மறுத்து இறை பணியாகிய அருள்வழிநிற்கில் அத்தடையைக் கடத்தல் கூடுமெனவும் சாதிக்கின்றன.

பதினொராஞ்சூத்திரம், பாசம் நீங்கினும் பாசப் பற்று நீக்கத்தின் பொருட்டு இடையறாது சிவபெரு மான் திருவடியைப் பற்றுதலாகிய சிவப்பேறு

கூறுவது. இது இரண்டு அதிகரணங்களை உடையது. அவற்றுள், முதலதிகரணம் முதல்வன் உயிர்கட்கு அறிவிக்கும் உபகாரமே அன்றி அறிதல் உபகாரம் செய்வதில்லை என்பாரை மறுத்து இரண்டு உபகாரமும் செய்வன் எனவும், இரண்டாம் அதிகரணம், பரமுத்தியில் அறிவிச்சை செயல்களின் தொழிற்பாடு இல்லை என்பாரை மறுத்து, பெத்தமுத்தி இரண்டினும் அத்துவிதமாய் நின்று அறிவித்தும் அறிந்தும் வரும் பேருபகாரத்தை மறவாது பத்தி செய்தலினாலேயே நிட்டை கூடுமாதலின், முத்தியில் அம்மூன்றிற்கும் தொழிற்பாடு உண்டெனவும் சாதித்தன.

பன்னிரண்டாஞ்சூத்திரம், சிவப்பேறுபெற்ற சிவஞானிகளாய் உடம்போடு கூடியிருக்கும் சீவன்முத்தர் எனப்படுவாரது இயல்பு கூறுவது. இது நான்கு அதிகரணங்களையுடையது. அவற்றுள், முதலதிகரணம், சீவன்முத்தர் முதலாவதாகச் செய்யவேண்டுவது மும்மலங்களையும் களைதல் எனவும், இரண்டாம் அதிகரணம், இரண்டாவதாகச்செய்யவேண்டுவது களைந்த மலங்கள் மீளப்பற்ருத வண்ணம் சிவனடியாரோடு இணங்குதல் எனவும், மூன்ரும் அதிகரணம், மூன்ருவதாகச் செய்யவேண்டுவது சிவனடியார் இணக்கம் நிலைபெறுதற் பொருட்டுத் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனவே கண்டு வழிபடுதல் எனவும், நான்காம் அதிகரணம், மேற்கூறியவாறு செய்தல் அவசியம் எனவும் சாதித்தன.

இனி, எந்தச் சமயமானது பிறசமயக்கொள்கைகளை இகழாது அவையெல்லாம் உயிர்களின் பக்குவத்திற்கேற்றவாறு இறைவன் கருணையினுல் அமைந்

துள்ளன ஆதலின் வேண்டப்படுவனவேயாம் என ஏன்றுகொண்டு, அவற்றிற்கு வேருன சிறப்புத்தன்மை யினையுங் கொண்டிருக்குமோ அந்தச் சமயமே மெய்ச் சமயமாம். அந்த மெய்ச்சமயம் சைவ சமயமேயாம். நம் சைவ சமயநூலே மெய்ந்நூலாகும். இக்கருத்துப் பற்றியே "ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்க ளொன்றோடொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள், யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னில், இது வாகும் அதுவல்ல தெனும்பிணக்க தின்றி, நீதியினு லிவையெல்லா மோரிடத்தே காண நின்றதியா தொரு சமய மதுசமயம் பொருணூல்" என அருணந்தி சிவா சாரியரும் "இராஜாங்கத் தமர்ந்தது வைதிக சைவம் அழகிதந்தோ" எனத் தாயுமான சுவாமிகளும் அருளிச் செய்வாராயினர்.

நம் சித்தாந்த சைவத்தின் உண்மையை இனிது விளக்குவது சிவஞானபோதமே யாகும்.

நந்தியெம்பெருமானுக்கு ஆகமங்களிற் கூறும் பொருள் வேற்றுமைபற்றி ஐயம் நிழந்தவிடத்து அவ் வையத்தை நீக்குதற்பொருட்டுச் சிவபெருமானால் உபதேசித்து அருளப்பெற்றதும் சிவஞானபோதமே யாகும்.

சனகாதி நால்வருக்கும் வேதவேதாந்தங்களால் தீராதமலைவைத் தீர்த்தற்பொருட்டு உபதேசிக்க எழுந் தருளி வந்த தட்சிணாமூர்த்தி திருக்கரத்தில் தரிக்கப் பெற்றதும் சிவஞானபோதமேயாகும்.

மாணிக்கவாசக சுவாமிகளுக்கு அனுக்கிரகஞ் செய்தற்பொருட்டுச் சிவபெருமான் மானுடச்சட்டை

தரித்துக் கயிலையினின்றும் எழுந்தருளிவந்து திருப் பெருந்துறையில் குருந்தமரத்தின் கீழ் வீற்றிருந்தருளிய போது தமது திருக்கரத்தில் தாங்கப்பெற்றதும் சிவ ஞானபோதமேயாகும்.

இத்தகைய சிறப்புடைய சிவஞானபோத நூலுக் குரிய உரைகளை இவ்வாதீன வெளியீடுகளாக வெளிப் படுத்தியதோடு நில்லாமல் சிவஞானபோதச் சிற்றுரைத் தெளிவு என்று இருபகுதிகளாக வெளியிடத் திரு வருள் பாலித்தது. நாம் செய்த சிவபுண்ணியவசத் தால் சிவஞானபோதம் உரைநடையின் நான்காம் பகுதியும் நமது குருமகா சந்நிதானத்தின் பெருங் கருணையால் இப்பொழுது வெளிப்படுகின்றது.

வழக்கம்போலவே இப்பகுதியினை அச்சிடத்தக்க முறையில் எனது மாணவர் செல்வச்சிரஞ்சீவி ஆத்ரேய ராமசேஷன் M. A., B. Ed. எழுதி உதவினர்.

சிவக்ஷேத்திர குருக்ஷேத்திர பரிபாலனங்களும் சித்தாந்த சைவ பரிபாலனம் செந்தண்டமிழ் மொழிப் பரிபாலனங்களும், திருமந்திரவெளியீடும், திருமந்திர மாநாடும் நடைபெறுவித்து, பேரூர்ப்புராணத்தையும், திருநாகைக்காரோணப் புராணத்தையும், குறிப்புரை முதலியவற்றுடன் வெளிவரச்செய்து மெய்கண்ட சாத்திரப் பிரதிட்டாசாரிய மூர்த்திகளாய் இத்திருவா வடுதுறை ஆதீனத்திலே 22வது குருமகாசந்நிதானமாக இப்பொழுது வீற்றிருந்து சிவஞானச் செங்கோல் செலுத்திவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி தொடர்ந்து இந் நான்காம்பகுதி இனிது முடிந்து வெளிவருகின்றது.

எளியேன் அயர்ச்சியால் ஏற்படும் பிழைகளைப் பொறுத்தருளி ஒன்றுக்கும் பற்றாத அடியேனையும் ஆட்கொண்டருளி இப்பணிவிடையையும் ஏற்று அருளும் ஸ்ரீ - ல - ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவடித் தாமரைகளை முப்போதும் எப்போதும் சிந்தித்து வந்தித்து வாழ்த்துகின்றேன்.

இங்ஙனம்,

சித்தாந்தசைவமணி —

த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை,

ஆதீன வித்துவான்.

திருவாவடுதுறை
20—10—72

உ
சிவமயம்

## ஸ்ரீ மெய்கண்டதேவநாயனுர் துதி.

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

—சிவஞானசித்தியார்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்திரண்டாவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவஞானபோதம் உரைநடை

## பத்தாம் சூத்திரம்

### உண்மை அதிகாரம் – பயனியல்

அவனே தானே யாகிய அந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

ஒன்பதாம் சூத்திரத்தால் சாதனஞ்செய்யும் முறை கூறி இனி அச்சாதனத்தால் உண்டாகும் பயன், பாசத்தை விடுதலும் சிவனை அடைதலும் சிவனை அடைந்த பின்னர்த் தேகம் இருக்குமளவும் பிராரத்துவ வாசனை தாக்காதிருத்தலும் ஆதலால், அம்மூன்றனையும் மூன்று சூத்திரத்தால் பயனியல் என வைத்துக் கூறத்தொடங்கி, முதலாவது இப்பத்தாஞ் சூத்திரத்தால் பாச நீக்கமாகிய பயனை வகுத்துக் கூறுகிறார்.

இச்சூத்திரத்தின் கருத்து யாதெனில், பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று. நுதலல் - கருதல்.

இக்கருத்துரையின் பொருளாவது, ஏழாம் சூத்திரத்தில் சாதிக்கும் பொருளாகிய உயிரினுடைய இயல்பையும், எட்டாம் சூத்திரத்தில் சாதித்துப் பெறப்படும்

பொருளாகிய பயனியல்பையும், ஒன்பதாம் சூத்திரத்தில் சாதிக்கும் முறையையும் உணர்த்தி, இனி அந்தச் சாதனத்தால் ஆகிய பயனியல்பை வகுத்துக் கூறத் தொடங்கினர். ஆதலால் இவ்வியல் பயனியல் என்னும் பெயரினை உடையதாயிற்று. அப்பயனாவது பாசநீக்கமும் சிவப்பேறும் என இருவகைப்படும். அவ்விரண்டினுள் சுட்டுணர்வாலாகிய ஏகதேச நோக்கத்தைத் திருவைந்தெழுத்தினை உச்சரித்தலால் அறவே நீக்கிய பொழுது பெறப்படுவது ஆன்மசுத்தியின் பயனாகிய பாச நீக்கமாகும். அப்பாச நீக்கத்தைச் செய்து கொள்ளுகின்ற தன்மையை முற்சூத்திரத்தில் சிந்தித்த பொருளைத் தெளியும்முறையை உணர்த்தும் முகத்தால் உணர்த்துதல் என்பதாம்.

ஒன்பதாம் சூத்திரத்தில் ஆன்ம சுத்தியையும் பத்தாம் சூத்திரத்தில் ஆன்ம லாபத்தையும் கூறுதலால் இந்த இருசூத்திரங்களும் சம்பந்தம் உடையனவாகும்.

இச்சூத்திரத்தின் பொருளாவது: ஞானக்கண்ணினால் காணப்பட்ட முதல்வன் பெத்தநிலையில் உயிரினோடு உடனாய் நின்று அறியவும் அவ்வுயிருக்கு வேருகக் காணப்படாமல் அவ்வுயிர் தானே அறிந்தேன் என்று சொல்லும்படி உயிரேயாய் ஒற்றுமைப்பட்டு அவ்வுயிரின் வழி நிற்பன்; அதுபோல முத்தி நிலையில் உயிர் முதல்வனோடு உடனாய் நின்று அறியவும் தான் (உயிர்) என அம்முதல்வனுக்கு வேருகக் காணப்படாமல் அம்முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு அந்த இறைபணியின் வழுவாது நிற்பின் மலம் மாயை என்னும் இவ்விரண்டு மலங்களுடன் வலிமை பொருந்திய கன்மமலமும் இல்லையாய் ஒழியும் என்பதாம்.

இறைபணி நிற்றல் இத்தன்மைத்து எனப்பின்னர் விளக்கப்படும்.

அவனே என்பதிலுள்ள ஏகாரம் உயிரினின்றும் முதல்வனைப் பிரித்தமையால் பிரிநிலை எனப்படும். தானே என்பதிலுள்ள ஏகாரம் தேற்றம். நெறி: உவமஉருபு. ஆதலால் அந்நெறி என்பதற்கு அப் பெத்தநிலை போல எனப் பொருள் கொண்டுள்ளார். மலமாயையொடு கூடியவினை என்றூராதலால் இன்றே என்று ஒருமையால் முடித்தனர். ஏகனாகி என்பது உவமையில் கூட்டப்பட்டது. தான் அவனே ஆகி என்பது உவமேயத்தில் கூட்டப்பட்டது.

ஏகனாகி ஒற்றுமைப் படுதலை எல்லாச் சமயவாதிகளும் ஒப்புக்கொண்டு அவ்வொற்றுமைக் குரிய சம்பந்தத்தை வேறுவேறு கூறுவர். அவர்கள் கூறுவன: குடம் உடைந்த விடத்துக் குடத்தில் வளைபட்ட குடாகாயமும் மகாகாயமும் ஒருபொருளாதல் போலப் பாச நீக்கத்தில் உயிரும் சிவமும் ஒருபொருளாய்ஒற்றுமைப் படுதல் எனவும்; கட்டையைக்கள்வன் என்று விபரீதக் காட்சியால் காணுங்காலத்துக் கட்டையே கள்வனாகத் தோன்றிப் பின் தெளிந்த விடத்துக் கள்வன் இல்லையாய்க் கட்டையே உளதாயினாற் போல அஞ்ஞான காலத்தில் சிவமே உயிராய்த் தோன்றிப் பின் ஞான காலத்தில் உயிர் என்பது இல்லையாய்ச் சிவமே உளதாய் ஒற்றுமைப்படுதல் எனவும்; மண்ணே வேற்றுமைப்பட்டுக் குடம் ஆயினாற் போலச் சிவமே பாச சம்பந்தத்தால் வேற்றுமைப்பட்டு உயிராகிப் பாச சம்பந்தத்தை நீக்கியவிடத்துச் சிவமாய் ஒற்றுமைப் படுதல் எனவும்; வெண்தாமரை என்றவிடத்து வெள்ளையாகிய குணமும் தாமரையாகிய பொருளும் பிரிக்க முடியாதவாறு போலச் சிவமே பொருளாய் உயிர் அப் பொருளின் குணமாய் விளங்கி ஒற்றுமைப்படுதல் எனவும்; தீயுடன் இரும்பு கலந்த விடத்து இரும்பின் தன்மைகெட்டு அவ்விரும்பு தீயேயாய்க் காணப்படு

மாறுபோலச்சிவத்துடன் உயிர் கலந்தவிடத்து உயிர்த் தன்மை கெட்டு அவ்வுயிர் சிவமேயாய் ஒற்றுமைப் படுதல் எனவும்; பாலுடன் நீர்கலந்தவிடத்துப் பால் வேறு நீர் வேருகப் பிரிக்க முடியாதவாறு போலச் சிவத்துடன் உயிர்கலந்த விடத்துச் சிவம்வேறு உயிர் வேறு எனப்பிரிக்க முடியாத சையோகத்தால் ஒற்று மைப்படுதல் எனவும்; கருட மந்திரத்தால் பாவிக்கப் படுகின்ற தைவிகக்கருடனும் பாவிக்கும் மாந்திரிகனும் ஒன்ருமாறுபோல உயிர், சிவம் நானெனப்பாவிக்கும் பாவகமாத்திரையால் ஒற்றுமைப்படுதல் எனவும்; அக் கினியினுல் காய்ந்த இரும்பினிடத்து நீர் சுவறி ஒற்று மைப்படுதல்போலச் சிவத்தினிடத்து உயிர் கெட்டு ஒற் றுமைப்படுதல் எனவும்; பேய் பிடியுண்டவன் அப்பே யாய் நிற்றல்போல உயிரினிடத்துச் சிவம்ஆவேசித்து நிற்றலால் உயிர் சிவமேயாய் ஒற்றுமைப்படுதல் என வும்; விறகினிடத்து அக்கினி இருந்தும் விளங்கா மையால் ஒற்றுமைப்பட்டு நிற்றல்போல முத்தியில் சிவனும் சீவனும் இருந்தும் சீவன் விளங்கித் தோன்ரு மையால் ஒற்றுமைப்படுதல் எனவும்; சூரியன் ஒளி முன் இருக்கும் விளக்கின் ஒளிக்கு விளக்கும் தன்மை கெட்டமையால் சூரியனெளியும் விளக்கொளியும் ஒற் றுமைப்படுதல் போலச் சிவசத்தியின் முன்னர் உயிரின் சத்திக்குச் செயலில்லாமையால் சிவமும் உயிரும் ஒற்று மைப்படுதல் எனவும்; நாயகனும் நாயகியும் இன்ப அநுபவ அளவில் ஒற்றுமைப் படுதல் போல சிவா னந்த அநுபவ அளவில் சிவனும் உயிரும் ஒற்றுமைப் படுதல் எனவும்; நண்பர் இருவர் நட்பின் மிகுதியால் ஒற்றுமைப்படுதல் போலச் சிவனிடத்து உயிர் வைத் திருக்கும் அன்பினுலும் உயிரினிடத்துச் சிவம் வைத் திருக்கும் அருளினுலும் உயிரும் சிவமும் ஒற்றுமைப் படுதல் எனவும்; ஊர்களிலுள்ள பசுவும் காட்டுப் பசு வும் பசுத்தன்மையின்தோற்றத்தால் ஒற்றுமைப்படுதல்

போல உயிர் பாசத்தை நீக்கியவிடத்துப் பாசம் நீங்கி யிருக்கும் ஒற்றுமையால் உயிரும் சிவமும் ஒற்றுமைப் படுதல் எனவும் கூறுதலாம்.

இச்சூத்திரத்தில் கூறிய ஒற்றுமை மேற்கூறிய கூற்றுக்களில் ஒன்றும் அன்று என்பதை அறிவித்தற்கு அவ்வுவமைகள் எதுவும் கூருமல் "அவனே தானே யாகிய அந்நெறி" எனப் பெத்தநிலையில் முதல்வன் உயிரோடு கலந்திருத்தலை உவமையாக எடுத்துக் காட்டினர்.

பெத்தநிலையில் முதல்வன் உயிராய் ஒற்றுமைப் பட்டு நிற்றலும் முத்திநிலையில் உயிர் சிவமாய் ஒற்று மைப்பட்டு நிற்றலும் அத்துவித சம்பந்தமேயாம். உயிரும் சிவமும் ஒற்றுமைப்பட்டு நிற்கும் சம்பந்தம் அத்துவித சம்பந்தமே என இச்சூத்திரத்தில் உவமை கூறி விளக்கவில்லை ஆயினும் பதினொராஞ் சூத்திரத் தில் கண்ணொளியையும் உயிரையும் அத்துவித சம்பந் தத்திற்கு உவமையாகக்கூறி விளக்கப்படும்.

இச்சூத்திரம் இரண்டு அதிகரணங்களையுடையது.

## முதல் அதிகரணம்

சிவனிடத்து ஏகனுகி நிற்கவேண்டும் எனக்கூறும்.

"ஈண்டு பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனுகி நிற்க என்றது" என்பது மேற்கோள்.

இம்மேற்கோள் கூறும் பொருளாவது: குருவால் ஞானம் விளங்கப்பெற்று, முதல்வனைத் தன்னுடைய அறிவினிடத்துக் காணுதலே வீடுபெறுதற்குப் போதிய தாகும் என்று சிவசமவாத சைவர் முதலியோர் கூற,

ஞானக்கண்ணால் காணப்பட்ட அம்முதல்வன் பெத்த நிலையில் உயிரினோடு உடனாய் நின்று அறியவும் உயிருக்கு வேறாகக் காணப்படாமல் உயிரே அறிந்த தென்று சொல்லும்படி உயிரேயாய் ஒற்றுமைப்பட்டு உயிரின் வழிநின்ற முறைமைபோல, முத்தியில் உயிர் அம்முதல்வனோடு உடனாய் நின்று அறியவும் அம் முதல்வனுக்கு வேறாகக் காணப்படாமல் அவனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கவேண்டும் என்று கூறி அவர்களை மறுத்தருளினர் என்பதாம்.

இங்ஙனம் ஞானம் விளங்கப்பெற்று, முதல்வனைக் காணுதலே வீடுபெறுதற்குப் போதியதாம் என்னும் சிவசமவாத சைவர்களை மறுத்து, உயிர் முதல்வனோடு ஏகனாகி நிற்கவேண்டும் எனக் கூறியபொழுது, அங்ஙனம் உயிர்க்கு முதல்வனோடு ஏகனாகி நிற்பது எதற்கு என்று அவர்கள் வினவ, முன்னர்க் கூறிய வாறு உயிர் முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு நின்றால், யான் என்றும் எனது என்றும் பகுத்து நிற்கும் மயக்க வுணர்விற்குக் காரணமாகிய மலம் நீங்கி, அம் முதல் வனது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறும். ஆதலால் அந்த மலம்நீங்குதற்குக் காரணமாதல்பற்றி 'ஏகனாகி நிற்கவேண்டும்' எனக்கூறி "அவ்வாறு நிற் கவே யான் எனது என்னும் செருக்கு அற்று அவனது சீபாதத்தை அணையுமாகலான்" என்னும் ஏதுவால் மேற்கோளைச் சாதித்தருளினார்.

இங்ஙனம் ஏகனாகி நில்லாதபோது மலம் நீங்காது. மலம் நீங்காதபொழுது திருவடியை அடையமுடியாது என்று விளக்குதற் பொருட்டு "அவ்வாறு நிற்கவே" என்று தேற்றேகாரத்தால் கூறியருளினார்.

யான் எனப்படுவது ஞாதிருவாகும். எனது எனப் படுவன ஞானமும் ஞேயமுமாகும்.

அவனது சீபாதம் என்றவிடத்தில் வந்துள்ள ஆறும் வேற்றுமை சீபாதம் (ஞானசத்தி, கிரியாசத்தி) பண்பாகவும் உணர்வாகவும் நிற்றலால், பண்பின் கிழமையும் உணர்ச்சிக் கிழமையும் பற்றிவந்தது.

யான் என்னும் செருக்கு எனவும், எனது என்னும் செருக்கு எனவும் தனித்தனி சென்று கூடுதலால் யான் எனது என்னும் செருக்குகள் எனப் பன்மையால் கூறுது செருக்கு என்று ஒருமையால் கூறியருளி ஞர். இங்கே செருக்கு என்பதற்கு மயக்க உணர்வு எனப் பொருள் கொள்ளாது மயக்க வுணர்விற்கு ஏது வாகிய மலம் எனப்பொருள் கொண்டுள்ளார். இங் ஙனம் பொருள் கொண்டமையால் ஆகுபெயராம்.

அற்று அணையும் என்பதில் அற்று என்னும் இறந்தகால வினையெச்சம் காரணப்பொருளில் வந் துள்ளது. அறுதல் காரணம், அணைதல் காரியம். ஆதலால் அற அணையும் என்று வரவேண்டியது அற்று அணையும் என்று திரிந்து வந்தது. இங்ஙனம் வருதலைச் செயவெனெச்சத்திரிபு என்பர். (மழை பெய்து குளம் நிறையும் என்ருற் போலக் காரண காரி யப்பொருள் பற்றிவந்த செயவெனெச்சத்திரிபு.)

இங்ஙனம் வீடுபெறுதற்கு ஞானத்திஞல் முதல்வனைக் காணுதலே போதியதாகும் என்பாரை மறுத்துச் சிவனிடத்து ஏகனுய் நின்ருல்தான் மலம் அறும் என்று சாதிக்கின்ருர். முதல்வஞேடு ஏகனுகி நிற்கவேண்டும் என்று சாதித்த பொழுது, யான் என்றும் எனது என்றும் பகுத்து உணரும் உணர்வை மயக்க வுணர்வு என்று கூறியதன் காரணம் என்ன என்று அவர்கள் மீண்டும் விஞவ, ஞாதிரு ஞேயம் என்னும் பிரிப்பில் லாமல் எல்லாம் யானே என்று எண்ணுகின்றவர்க ளுக்கு உயிருணர்வு முனைத்து நிற்கும். அங்ஙனம்

உயிருணர்வு முனைத்து தோன்றுதலால் அப்பொழுது முதல்வன் அவ்வுயிர்க்கு வேருகக் காணப்படாது, அவ்வுயிரேயாய் நிற்பன். அதுபோல ஞாதிருவை யானென்றும் ஞேயத்தை அவனென்றும் பிரித்தறிந்து நிற்பார்க்கும் அங்ஙனம் பிரித்தறியும் உயிருணர்வு முனைத்துத் தோன்றும். அப்பொழுது முதல்வன் அவ்வுயிர்க்கு வேருய்க் காணப்படாது, அவ்வுயிரே யாய் நிற்பன். இங்ஙனமன்றி யான் என்று எண்ணும் உயிரினது முனைப்பு இல்லாமல் எல்லாம் முதல்வனே என்று காணும் தெளிவு உடையவர்களை முதல்வன் தன்னுடைய திருவடியின் வியாபகத்தினுள் அடங்கி நிற்கச்செய்து எல்லாம் தானேயாய் நிற்பன் என்று, ஞாதிருவை யான் என்றும் ஞேயத்தை அவன் என்றும் பிரித்துணரும் உணர்வு மயக்கவுணர்வு என்றுகூறி அவர்களைமறுத்து உதாரணத்தால் ஏதுவை வலியுறுத் தருளினூர்.

உதாரணம் வருமாறு :

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாதல்
தானென ஒன் றின்றியே தானதுவாய் - நானென ஒன்(று)
இல்லென்று தானே எனுமவரைத் தன்னடிவைத்(து)
இல்லென்று தானும் இறை.

தானதுவாய் என்பதில் ஆய் என்னும் வினையெச் சம் தானும் என்பதிலுள்ள ஆம் என்னும் வினையோடு முடிந்தது. இவ்வினையெச்சம் 'நள்ளார்க்கு நஞ்சு ஒத்து நட்டார்க்கு அமிழ்து ஒக்கும் இவன்' அதாவது இவன் தன்னைச் சாராதார்க்கு விஷத்தை ஒத்தும், தன்னைச் சார்ந்தார்க்கு அமிழ்தத்தை ஒத்தும் நிற்பன் என்பது தன் வினையாதல்போல, முதல்வன் உயிரி னுணர்வு முனைத்துத் தோன்றியபொழுது உயிராயும், உயிர் தனது உணர்வு முனைத்துத் தோன்ருது முதல்

வனது வியாபகத்துள் அடங்கி நின்று எல்லாம் சிவமே எனக் காணும்பொழுது சிவமாயும் நிற்பன் என்று தன்வினையாய் நின்றது.

எண்ணினர்க்கும் என்பதிலுள்ள உம்மை, ஞாதிரு ஞேயங்களைப் பிரித்து உணராது எல்லாம் யானே என்று எண்ணுபவர்களுக்கு உயிருணர்வு முனைத்துத் தோன்றுதலைத் தழுவுதலின் இறந்தது தழுவிய எச்ச வும்மை. உம்மையின் மகரம் சந்திநோக்கிக் கெட்டது.

உயிரின் அறிவு முனைத்துத் தோன்றியவிடத்து முதல்வன் தோன்ருது நிற்றலும், உயிரின் அறிவு முனைத்துத் தோன்ருதவிடத்து முதல்வன் விளங்கித் தோன்றலும் எங்ஙனம் என்று வினுவ, ஒரு துணையைக் கொண்டு பிரகாசிக்கும் தூல ஒளியாகிய கண்ணொளி யும் தானே பிரகாசிக்கும் சூக்கும ஒளியாகிய விளக் கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையை ஆராயப்புகின் அவ்விரு ஒளிகளும் வேறு வேறு பிரித் தறிய வாரா. அதாவது, தூலவொளி கண்ணொளி யாகும். சூக்கும ஒளி விளக்கொளியாகும். கண்ணொளி காணுந்தன்மையது. விளக்கொளி கண்ணொளி பொரு ளைக் காணும்படி காட்டும் தன்மையது. இந்த இரண்டு ஒளிகளும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும். இவ் விதம் அத்துவிதமாய்க் கலந்துநிற்கும் நிலையை ஆராய்ந்தறியவல்ல நுண்ணுணர்வு உடையார்க்குப் பிரித்தறிய இயலாது. ஆதலால் கண்ணொளியே காணு கின்றது என்று அறியும்பொழுது காணுந்தன்மையே முனைத்துத்தோன்றும். ஆதலால் அப்பொழுது விளக் கொளி இருந்தும் இல்லையாம். இங்ஙனம் விளக் கொளியே காணுகின்றது என்று அறியும்பொழுது காட்டும் தன்மைதான் முனைத்துத் தோன்றும். அப் பொழுது கண்ணொளி இருந்தும் இல்லையாம்.

இங்ஙனமன்றி கண்ணொளியையும் விளக்கொளியையும் பிரித்துக் கண்டாலும் அப்பொழுது காணுந் தன்மை முனைத்துத்தோன்றும். ஆதலால் அப்பொழுது விளக்கொளி திரிவு புலனாகக் காணப்படும். தெளிவு புலனாகக் காணப்படாது. அதுபோலத் தூல அறிவு உயிராகும். சூக்கும அறிவு சிவமாகும். தூல அறிவு காணுந்தன்மையது. சூக்கும அறிவு காட்டுந்தன்மையது. இவ்விரண்டு அறிவும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலை பிரித்தறியவாராது. ஆதலால் தூல அறிவாகிய உயிர் காணுகின்றது என்று அறியும் பொழுது காணுந்தன்மையே முனைத்துத் தோன்றும். ஆதலால் அப்பொழுது சூக்கும அறிவாகிய சிவம் இருந்தும் இல்லையாம். இங்ஙனமன்றிச் சூக்கும அறிவாகிய சிவமே காணுகின்றது என்று அறியும்போது காட்டுந்தன்மையே முனைத்துத்தோன்றும். ஆதலால் அப்பொழுது தூல அறிவாகிய உயிர் இருந்தும் இல்லையாகும்.

இங்ஙனமன்றி, உயிரும் சிவமும் எனப் பிரித்துக் கண்டாலும் அப்பொழுது காணுந்தன்மையே முனைத்துத்தோன்றுதலின் அப்பொழுது சிவம் திரிவு புலனாகக் காட்சிப் படுவதாம். தெளிவு புலனாகக் காட்சிப் படாதென்று ஞாதிரு ஞேயங்களைப் பிரித்து உணரும் போது சிவம் விளங்காது நிற்றலும், பிரித்துணராது எல்லாம் சிவமே எனக் காணும்பொழுது சிவம் விளங்கி நிற்றலும் பெறப்படுதலை உணர்க என்று விளக்கியருளினர்.

புடை நூலாசிரியராகிய ஸ்ரீ உமாபதிதேவநாயனர் "கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும் கருத்து ஒன்றன்றே" (சிவப்பிரகாசம் 58) அஃதாவது கண்ணொளி விளக்கொளியோடு கலந்துநிற்கும்; இங்ஙனம்

கலந்து நின்றாலும் கண்ணொளி கண்ணொளியே; விளக்கொளி விளக்கொளியே; இரண்டும் ஒரு பொருளன்று எனச் சிவப்பிரகாசத்திலும் ஞாதிருஞான ஞேயப் பகுப்பில்லை என்பவர்களுக்கு உயிருணர்வு முனைத்துத் தோன்றுதலின் சிவம் விளங்கித் தோன்றாது என்பார் "காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் நீத்து உண்மை, காண்பார்கள் நன்முத்தி காணார்கள்" என்றும், ஞாதிரு ஞேயங்களைப் பிரித்து உணர்பவர்களுக்கும் அவ்வாறு உணர்கின்ற உயிருணர்வு முனைத்துத் தோன்றுதலின் சிவம் விளங்கித் தோன்றாதென்பார் மீட்டும் "காண்பானும் - காட்டுவதும் காண்பதுவும் தண்கடந்தைச் சம்பந்தன், வாட்டுநெறி வாராதவர்" (வினா வெண்பா. 11) எனவும் அருளியது இக்கருத்துப்பற்றியே என உணர்க.

கண்ணொளியைக் காணுதல், விளக்கொளியைக் காணுதல் ஆகிய இரண்டினுள் எது திரிவு காட்சி எது தெளிவு காட்சிஎனின், விளக்கொளி கண்ணொளியோடு கூடியபொழுதும் அவ்விளக்கொளி தன் தன்மையில் மாறுபடாது நிற்றலினால் அவ்விளக்கொளியைக் காணுவது "தெளிவுகாட்சி" எனப்படும். கண்ணொளியோடு கூடியஞாயிற்றொளிக்கும் திங்களொளிக்கும் இங்ஙனமே கொள்க. கண்ணொளி விளக்கொளியோடு கூடிய பொழுது அக்கண்ணொளி தன் தன்மையாய் நில்லாது சார்ந்ததன் வண்ணமாய்ப் படிகம்போல விளக்கொளி மயமாய் நிற்றலினால் அந்தக் கண்ணொளியை விளக்கொளிக்கு வேறாகக் காணுதல் 'திரிவுகாட்சி' எனப்படும். அதுபோலச் சூக்கும வறிவாகிய சிவம் தூலவறிவாகிய உயிரோடு கூடியபொழுதும் அச்சிவம் தன் தன்மையில் மாறுபடாது நிற்றலால் அந்தச் சிவத்தைக்காணுதல் 'தெளிவுகாட்சி' எனப்படும். தூல அறிவாகிய உயிர் சூக்கும அறிவாகிய சிவத்தோடு

கூடியபொழுது அவ்வுயிர் தன் தன்மையாய் நில்லாது, படிகத்தைப்போலச் சார்ந்துநின்ற சிவத்தின் தன்மையாய் நிற்றலால் அவ்வுயிரைச் சிவத்துக்கு வேருகக் காணுதல் 'திரிவுகாட்சி' எனப்படும் என்று உணர்க என்பதாம்.

விளக்கொளியின் முன்னர்க் கண்ணொளி சத்தி மடங்கிப் போவதால் கண்ணொளி விளக்கொளியைப் போல வேருகக் காண இயலாதாயிற்று என்று சொல்லலாமோ எனில், விளக்கொளியின் முன்னர்க் கண்ணொளி சத்திகெட்டு நிற்குமாஞல் விளக்கொளி காணப்படாதிருத்தல் வேண்டும். அங்ஙனமன்றி விளக்கொளி காணப்படுதலால் விளக்கொளியின் முன்னர்க் கண்ணொளி சத்திமடங்கி நிற்குமென்று சொல்லுதல்கூடாது என்று உணர்க என்பதாம்.

கண்ணின் குணம் ஒளி; அவ்வொளி தானுகச் சிறிதும் விளங்கும் இயல்புடையது அன்று. ஆதலால் கண்ணுக்கு ஒளியாகிய குணம் உண்டு என்பதற்குப் பிரமாணம் என்னவெனின், ஆகாயத்தின் குணம் சத்தம். அச்சத்தம் முரசு (வாத்தியம்) முதலிய வியஞ்சகத்தால் (விளங்கும் பொருளால்) விளங்கும் தன்மையது; தானே விளங்கும் தன்மையது அன்று, ஆதலால் எதிரொலி வடிவமாகிய சத்தத்தை ஆகாயத்தின் குணமன்று, வியஞ்சகப் பொருளின்குணம் என்று சொல்லுபவர் ஒருவரும் இலர். அதுபோல, கண்ணின் குணமாகிய ஒளியும் வியஞ்சகத்தால் விளங்குந் தன்மையது, வியஞ்சகமில்லாவிடத்துத் தானே விளங்கும் தன்மையது அன்று. ஆதலால் அவ்வொளியைக் கண்ணின் குணம் அன்று என்றுசொல்லுதல் பொருந்தாது. அக்கண்ணொளி தன்னை விளக்குதற்குரிய வியஞ்சகப்பொருள் ஏகதேசமாஞல் ஏகதேசமாக

விளங்கியும், வியாபகமானுல் வியாபகமாக விளங்கியும் நிற்கும் தன்மையுடையது என்பதே பிரமாணமென்று உணர்க.

இனி, 'கண்ணொளி விளக்கின்சோதி கலந்திடும்' அதாவது கண்ணொளி விளக்கொளியோடு கலந்திடும் என்பதற்குப் பிரமாணம் என்ன எனின், பல கண்ணொளிகள் குடமாகிய ஒருபொருளை அறிதற்கு அக்குடத்தைச் சார்கின்றன. அங்ஙனம் சார்ந்த கண்ணொளிகளுக்குள் ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லை. அதுபோல ஓரிடத்தில் உள்ள விளக்கொளிக்கும் கண்ணொளிக்கும் தம்முள் சம்பந்தம் இல்லை என்று கொள்ளுதலே பொருத்தமுடையது எனின், குடமாகிய ஒருபொருளைச் சார்ந்த பல கண்ணொளிகள் தம்முள் ஒன்றையொன்று காணுதலும் இல்லை, ஒன்றுக்கொன்று காட்டுதலும் இல்லை. ஆதலால் அக்கண்ணொளிகள் பலவும் தம்முள் கலத்தற்கு ஒருவித சம்பந்தமுமில்லை. அங்ஙனமன்றி, கண் விளக்கைக் காணுதலும் விளக்கு கண்ணிற்குக் காட்டுதலுமாகிய சம்பந்தத்தையுடையன ஆதலால், இச்சம்பந்தம் இல்லாத கண்ணொளிகள் உவமானம் ஆகா. ஆதலாலும் கண்முதலிய இந்திரியங்கள் அறிதற்குரிய விடயங்களோடு சேர்ந்தே அறிவனவாகும். சந்நிதி மாத்திரையால் (எதிர்ப்படுதல் மாத்திரத்தால்) அறியமாட்டா என்பது எல்லா ஆகமங்களுடைய துணிபு ஆகும். ஆதலாலும் காணுதலும் காட்டுதலுமாகிய சம்பந்தமுடைய கண்ணொளி விளக்கொளிகளுக்குச் சம்பந்தம் இல்லை என்பது சிவாகம வழக்கோடும் உலக வழக்கோடும் மாறுபடுவார் சொல்லும் சொல்லாகும் என்றுகூறி, இதுவே பிரமாணம் எனத் தெரிவித்தவாறும்.

இங்ஙனம் உவமைக்கு ஓதிய எல்லாவற்றையும் உவமேயத்திற்கும் கொள்வது எங்ஙனமெனின், தூல

அறிவாகிய உயிரும் சூக்குமவறிவாகிய சிவமும் ஓர் இடத்தில் உள்ளனவாம். அவைகளுக்குள் தூலவறிவாகிய உயிர், சூக்குமவறிவாகிய சிவத்தைக்காணுதலும், சூக்கும அறிவாகிய சிவம் தூல அறிவாகிய உயிருக்குக் காட்டுதலும் ஆகிய சம்பந்தத்தை உடையன என்று கொள்ளுதலும், உயிர் முதல்வனோடு அத்துவிதமாய்க் கலந்து நின்று அறியுமெனக் கொள்ளுதலும் என்க என்பதாம்.

கண்கள் தம்முள் ஒன்றை ஒன்று காணுதலில்லை. அதுபோல உயிர்களும் தம்முள் ஒன்றைஒன்று அறியா என்று கொள்ளலா மெனின், கண்கள் தம்முள் ஒன்றையொன்று காணுதல் இல்லைஎன்றது குடமும் விளக்கும் கண்களுக்கு வேருகத் தனிப்பொருளாகக் காணப்படுதல் போல கண்ணொளிகள் ஒன்றுக்கொன்று வேருகத் தனிப்பொருளாகக் காணப்படாமையால் என்றுணர்க.

கண்ணொளி விளக்கொளியைக் காணும்பொழுது விளக்கொளியின் மயமாய் இருந்து தன்னையும் அவ் விளக்கொளியின் மயமாய் அறியும் என்பது கண் கூடாக (பிரத்தியட்சமாக) அறியக்கிடப்பதாகும்; ஆதலால் மற்றைய கண்ணொளிகளையும் அவ்விளக்கொளியின் மயமாக அறியும். அதுபோல உயிரும் பிறவுயிர்களைத் தனியாக அறியாது. சிவத்தை அறியும் பொழுது சிவமயமாக நின்று தன்னை அறிந்ததுபோல, அச்சிவத்தைச் சார்ந்த பிறவுயிர்களையும் அச்சிவமயமாக அறியும் என்பது பெறப்படுகின்றது. ஆதலால் உயிர்கள் பிறவுயிர்களை அறியா என்பது கொள்ளத் தக்கதன்று என்று உணர்க என்பதாம்.

ஆசிரியர் மெய்கண்டதேவர் 'நாடி அரன், தன்னாலே தன்னையும் கண்டு தமைக்காணார், என்னும் என

அறிவார்' அதாவது, சிவனருளாலே சிவனை அறிந்து சிவனது திருவடியில் அடங்கி நிற்றலால் சிவமாகிய் தன்னையும் அறியாதவர்கள் தம்மை எத்தன்மையர் என்று அறிவார்கள் என்று ஆறுஞ் சூத்திரத்தில் கூறியருளியதும்;

ஸ்ரீ உமாபதிசிவாசாரியரும் 'தன்னாலே தனையறிந்தால்-தன்னையும் தானே காணும் தானதுவாகிநின்றே' (சிவப்பிரகாசம் 72) அதாவது உயிர்சிவஞானத்தினல் சிவனை அறிந்தால் சிவமயமாக நின்று, தன்னையும் அறியும் எனவும், 'அதில் அறிவடங்கி மன்னிட வியாபியாய வான்பயன் தோன்றும்' (சிவப்பிரகாசம் 78) அதாவது உயிர் சிவத்தின் திருவடியில் அடங்கி நிற்பின் அவ்வுயிர் சிவமயமாக நிற்கும் பெரும்பயன் தோன்றும் எனவும் கூறியருளியதும்;

ஸ்ரீ பட்டினத்துப் பிள்ளையார் "என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன் - நின்னிலை அனைத்தையும் கண்டேன் என்னே - நின்னைக்காணு மாந்தர்-தம்மையும் காணுத் தன்மையோரே" அதாவது எம் பெருமானே! நின்னுடைய நிலையைக்கண்டேன், அதனல் நின்னுடைய வடிவமாய் நின்ற என்னையும் கண்டேன், அங்ஙனமே நின்னுடையவடிவமாக நின்ற பிறரையும் கண்டேன். ஆதலால் நின்னை அறியாதவர்கள் தம்மையும் அறியாதவர்கள் ஆவார்கள் என்று திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் கூறியருளியதும் இக்கருத்துப்பற்றியே என்று உணர்க என்பதாம்.

## இரண்டாம் அதிகரணம்

'இனி, இறைபணி வழுவாது நிற்க என்றது' என்பது மேற்கோள்.

இம்மேற்கோள் கூறும் பொருள் யாதெனின், உடம்பு நிற்கும் வரையில் அவ்வுடம்பு அனுபவித்தற்கு உரிய வினைப்பயன்களாகிய இன்பத் துன்பங்களையும் அவற்றை அனுபவித்தற்குத் துணைக்காரணமாய் உடன்நிகழும் முயற்சியையும் எவ்விதத்தாலும் நீக்க முடியாமையால், அவ்வின்பத் துன்பங்களும் அம் முயற்சியும் ஏகனாகி நிற்றற்குத் தடையாம். ஆதலால் அத்தடைகளை நீக்கமுடியாது என்று சுத்தசைவர் ஈறாக வுள்ள பல மதத்தரும் கூற, முதல்வனது அருளின்வழி சலியாமல் நிலைத்துநிற்க, உடம்பு அனுபவித்தற்கு எடுத்துக்கொண்ட வினைப்பயன்களாகிய இன்பத் துன்பங்களும், அந்த இன்பத் துன்பங்களை அனுப வித்தற்குத் துணைக்காரணமாய் உடனிகழும் முயற்சி களும் ஏகனாகி நிற்றற்குத் தடையாகா என்று கூறி, அவர்களை மறுத்தருளினர் என்பதாம்.

சூத்திரத்தில் 'நிற்க' என்றதற்குப் பொருள் சலி யாது நிலைபெறுதல் என்று விளக்கும்பொருட்டு ஆசிரியர் 'வழுவாது நிற்க' என்று அருளினார்.

இறைபணி என்றது யாதெனின், 'அவனருளா லல்லது ஒன்றையும் செய்யாறுதல்' என்று ஆசிரியர் தாமே விளக்குதலின் விளங்கும் என்பதாம்.

இங்ஙனம் அனுபவித்தற்குரிய இன்பத் துன்பங் களும் அவற்றை அனுபவித்தற்குரிய முயற்சியும் ஆகிய இவைகள் ஏகனாகி நிற்றலுக்குத் தடையாகாவண்ணம் இறைபணி நிற்க என்று கூறி அவர்களை மறுத்த பொழுது, அவர்கள் மீண்டும் இன்பத் துன்பங்களும் முயற்சியுமாகிய அத்தடைகளை நீக்குதற்கு ஏகனாகி நிற்றலே போதியதொன்றாகும். இறைபணி நிற்றல் வேண்டுவதில்லை என்று கூற, உயிரினுடைய செயல் முதல்வனுடைய செயலை இன்றி முடியாது. ஆதலால்

அவ்வுயிர் தான் செய்வனவெல்லாம் முதல்வனது அருளின் வழியே நின்று செய்யுமாறுல் மாயேயமும் கன்மமும் ஏகனுகி நிற்றலுக்குத் தடையாய் வந்து தாக்கமாட்டா. ஆதலால் அம்மாயேயமும் கன்மமும் தாக்காமலிருத்தற்பொருட்டு உபாயமாதலால் இறை பணி நிற்கவேண்டும் எனக்கூறி, 'அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யாறுகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா ஆகலான்' என்னும் ஏதுவால் மேற்கோளைச் சாதித்தருளினுர்.

அஞ்ஞானகன்மம்: உம்மைத்தொகை; ஆதலால் அஞ்ஞானமும் கன்மமும் என்று பொருள்கொண்டுள்ளார். மலமில்லை என்பது முதலதிகரணத்தின் ஏதுவால் பெறப்பட்டமையால் இவ்விடத்தில் அஞ்ஞானம் என்பதற்கு மாயையின் காரியமாகிய மயக்கம் எனப் பொருள் கொள்ளப்பட்டது. உடம்பு அழியுமளவும் அஞ்ஞானமும் கன்மமும் அழியமாட்டா; ஆதலால் அறும் என்று கூருமல் 'பிரவேசியா' என்று கூறியருளினுர் என்றுணர்க.

இங்ஙனம் உயிர் தான்செய்யும் செயல்களை யெல்லாம் முதல்வனது அருளின்வழி நின்று செய்யுமாறுல் அனுபவித்தற்குரிய இன்பத்துன்பங்களும்அவ்வின்பத் துன்பங்களை அனுபவித்தற்குத் துணைக்காரணமாகிய விருப்பு வெறுப்புக்களும் ஏகனுகி நிற்றலுக்குத் தடையாகா என்று சாதித்தவழி, உடம்போடுகூடி நிற்கின்றவர்களுக்கு அனுபவித்தற்குரிய பிராரத்தவினையும் அப் பிராரத்த வினையால் உண்டாகும் ஆகாமிய வினையும் இருத்தலால், இறைபணி நிற்றல் பற்றிப் பிராரத்த வினையும் ஆகாமிய வினையும் பிரவேசியா என்பது பொருந்தாது என்றுகூற; வினைகளை அனுபவித்தற்கும் அவ்வினைகளைச் செய்தற்கும் கருவியாக (காரணமாக) உள்ள இந்திரியங்கள் மாயையின் காரியமாயுள்ளன.

ஆதலால் இந்திரியங்கள் நாமல்ல. அவ்விந்திரியங்கள் தொழிற்படுதலும் முதல்வனுலேயாம் ஆதலால் தொழிற் படுதலும் நம்மாலன்று. வினைகள் தோன்றுதற்கு இட மாகிய விடயம் முதலானவைகளும் மாயையின்காரியங் களாக உள்ளனவாம். ஆதலால் அவை நாமல்ல. விடயமுதலானவைகள் தொழிற்படுதலும் முதல்வனுலே யாம்; நம்மாலல்ல. அந்த மாயையின் காரியங்களோடு கூடி வினைகளைச் செய்தற்கும் அவ்வினைகளை அனுப வித்தற்கும் உரிய வினைமுதலாகிய நாமும், நம்முடைய ஞானசத்தி கிரியாசத்திகளை முதல்வன் விளக்கிய பொழுது விளங்கியும், முதல்வன் விளக்காதபொழுது விளங்காமலும் இருத்தலால் முதல்வன் வசமாக நடக் கும் அடிமையாவோம் சுதந்தரமுடையோ மல்லேம் என்று பசுவினது இயல்பையும் பாசத்தினது இயல்பை யும் உள்ளவாறு அறிந்து, தாம் செய்யும் செயல்களை யெல்லாம் முதல்வனது அருளின் வழிசெய்யும் செய லாகக் கண்டுகொண்டு இருப்பாரானுல், இங்ஙனம் முதல்வன் அருளின்வழி நின்று செய்யும் அடிமைத்திற முடையவர்கள் எந்த உடம்பிலிருந்துகொண்டு எந்த வினைகளைச் செய்தாலும் அவர்களுக்கு அவ்வினைகள் பந்தமாகமாட்டா.

ஆகாமிய வினையை விட்டு நீங்காது உடனுகக் கொண்டு வருகின்ற பிராரத்த வினையும் தன்னை உயி ருடன் கூட்டுவிக்கும் முதல்வனுடைய சந்நிதியில் உட லூழாய்க் கழியும் என்று கூறினர். இறைபணி நிற்ற லால் அஞ்ஞான கன்மம் பிரவேசியா என்பதற்குக் காட்டும் உதாரணம் வருமாறு:

நாமல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி
நாமல்ல நாமும் அரனுடைமை—ஆமென்னில்
எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்.

என்பதாம்.

இனி, உடல் சடமாதலால் அதற்கு அநுபவங் கூடாது. உடலோடு கூடிய உயிருக்குத்தான் அநுபவங்கூடும். அவ்வாறாகவும் பிராரத்த வினையின் பயன் உடலின் அநுபவமாய்க் கழியும் என்பது எவ்வாறு பொருந்துமெனின், உடல் தனித்தும் அநுபவியாது; உயிர் தனித்தும் அநுபவியாது; இரண்டும் கூடினவிடத்துத்தான் அநுபவம் நிகழும். அவ்விரண்டனுள், உடல் தானே உயிரைக் கூடாது; உயிர் தானே உடலை எடுத்துக்கொள்ளாது; ஆகவே, இறைவன் அருள் கூட்ட உடலுடன் உயிர்கூடும். அவ்வாறு கூடிநின்ற உயிர் தன்செயலை இறைவன் அருட்செயலாக அறிந்தபொழுது அச்செயலால் உண்டாகும் பயன் யான்செய்தேன் என்னும் முனைப்பில்லாமையால் தன்னைத்தாக்குதல் இல்லை. உயிரைச் செய்யும்படி செய்து அது செய்வதற்காகத் தான் செய்தலேயன்றித் தானாகவே செய்யாமையால் அப்பயன் இறைவனையும் தாக்காது. இவ்வாறு உயிரையும் இறைவனையும் தாக்காதாகவே இறைவன் முன்னிலையில் உடலையே தாக்கும். இது எதுபோலவெனின், அரசன் ஆணைவழி நிற்கும் அதிகாரியொருவன் செய்த செயலின் பயன் அவ்வதிகாரியையும் அரசனையும் தாக்காது அரசன் முன்னிலையில் அவ் வதிகாரத்தைத் தாக்குதல்போல் ஆகும்.

நம்வழியின் அல்ல என்பது விடயங்களை உணர்த்துவழி என்பதனோடுங்கூட்டி வழி நம்வழியின் அல்ல என உரைக்கப்பட்டது. அல்ல என்னும் அன்மைச் சொல் தழுவப்படும் பொருளின்மேல் நின்றது. ஆதலால் இந்திரியம் நாமல்ல என்பதிலுள்ள அல்ல என்னும் படர்க்கை பலவறிசொல் நாம் என்னும் தன்மைச் சொல்லைத் தழுவாது இந்திரியம் என்னும் தழுவப்படும்

பொருள்மேல் நின்றது. இங்ஙனமே மற்ற அல்ல என்னும் அன்மைச் சொற்களுக்கும் கொள்க. நின்றும் என்பதிலுள்ள உம்மை வினையில்லாமைக்குக் காரணமாகிய அடிமைத்திறத்தின் சிறப்பை உணர்த்துதலால் சிறப்பும்மை. நாமும் என்பதிலுள்ள உம்மை இந்திரியங்கள் அடிமை என்பதைத் தழுவுவதாலும் முற்செய் வினையும் என்பதிலுள்ள உம்மை ஆகாமிய வினையைத் தழுவுதலாலும் இவை இறந்தது தழுவிய எச்சவும்மைகளாம் என்க.

சஞ்சிதவினை தீக்கை செய்தவுடனே நெருப்பினைச் சேர்ந்த விதை கெட்டொழிதல் போலக் கெடுதலால் இவ்விடத்தில் முற்செய்வினை என்றது பிராரத்த வினை என்றுகொள்க.

கழியும் என்பது வருவித்து உரைக்கப்பட்டது. இங்ஙனம் ஒரு சொல்லை வருவித்துரைத்தலைச் சொல்லெச்சம் என்பர். உடலூழாய் என்பது வருவித்து உரைக்கப்பட்டது. கழியும் என்பது உடலூழாய் என்னும் சொல்லினை விரும்பி நிற்றலால் அவ்விருப்பம் பற்றி வருவித்துரைக்கப்பட்டது. இங்ஙனம் வருவித்துரைத்தலை அவாய்நிலை என்பர். தருதல் இடவழுவமைதி. எங்ஙனமெனின், தருதல்வினை தன்மை முன்னிலைகளுக் குரியது; ஈண்டுப் படர்க்கையிடத்து வந்ததால் வழுவமைதியாயிற்று. உடலூழாய்க் கழிதல் ஆவது உடம்பு அழிந்தவுடன் தானும் அழிவதாம்.

இங்ஙனம் தாம்செய்யும் செயல்களை எல்லாம் முதல்வன் அருள் வழிநின்று செய்யும் செயலாகக் கண்டு நிற்கும் அடிமைத்திறம் உடையவர்களுக்குப் பிராரத்த வினை முதல்வன் சந்நிதியில் உடலூழாய்க் கழியும் என்று சாதித்த பொழுது, முதல்வன் அருள்வழி நின்று செய்யும் செயலுடையவர்களுக்குப் பிராரத்த

வினை அவரைச் சாராது உடலூழாய்க் கழியுமாறும், அங்ஙனம் முதல்வன் அருளின் வழிநின்று செய்யும் செயலில்லாத மற்றவர்களுக்குப் பிராரத்தவினை அவர்களை உயிரூழாய் வந்து வருத்துமாறும் செய்வானுனல் முதல்வன் நடுவுநிலைமை உடையவனல்லன் என்று பெறப்பட்டுக் குற்றமாம் என்று கூற, தலைவர்களுக்கு உரிய கடமை தம்மை அடைக்கலம் என்று சார்ந்தவர்களை அவர்களுக்குவரும் துன்பத்தைநீக்கி ஆதாரமாய் நின்று காப்பதாகும். ஆதலால் முதல்வன் ஏனையோர்களை விடுத்துத் தன்னைச் சார்ந்தவர்களைக் காத்தலினுல் நடுவுநிலைமை யுடையவனேயாம்.

தன்னைச்சார்ந்து தன் அடித்தொழில் செய்யவல்லார் (இறைபணி நிற்கவல்லார்) தன்னைப்போல ஆகாமிய வினையினது பந்தத்தை இல்லாதவராகச் செய்து, அங்ஙனம் தன்னைச் சார்ந்து தன் அடித்தொழில் செய்யாத மற்றவர்களுக்குவரும் ஆகாமியவினையை அவர்களுக்குக் கொடுப்பான்; ஆதலால் அடிமைத் தொழில் செய்வாரிடத்தும் நுணுகிவந்து கூடுகின்ற பிராரத்த வினையைச் செய்வோர்களது செயலுக்குத் தகுந்த பயனுய் உடலூழாய்க் கழியுமாறும் உயிரூழாய் வருத்துமாறும் இங்ஙனம் இருவகையாகச் செய்வன் என்று உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினர்.

உதாரணம் வருமாறு :

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனுதல்
சார்ந்தாரைக் காத்தும் சலமிலனுய்ச் - சார்ந்தடியார்
தாந்தானுச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்
ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு.

என்பதாம்.

மேலை வெண்பாவில் இறைபணியார்க்கில்லை வினை முற்செய்வினையும் தருவான் முன் என்றது பற்றி இறை

பணியில் நில்லாத ஏனையோர்க்கு அவர் செய்த வினையின் பயனைப் பக்குவ முறைப்படி அவரநுபவிக்கச் செய்து இறைபணியில் நிற்பவர்க்கு அவர் செய்த வினைப்பயனை அவர் அநுபவியாதவாறு விலக்குதல் இறைவனுக்கு நடுவுநிலைமையன்று - அதாவது இறைபணி நிற்பார்க்குப் பிராரத்தவினை உட்லூழாய்க் கழியுமாறு செய்து, இறைபணி நில்லாதார்க்குப் பிராரத்தவினை உயிரூழாய் வருத்துமாறு நியதிசெய்து ஊட்டுவானுதல் முதல்வன் நடுவுநிலைமை உடையவன் அல்லன் என்று கூறுவாரை நோக்கி அதனை உடன்பட்டுச் சமாதானம் கூறும் பொருட்டுச் "சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன்" எனப் பழமொழி எடுத்துக் காட்டினர். ஆயினும் அப்பழமொழியானது சார்ந்தவர் குற்றமுடையவரேனும் காத்தல் கடன் என்னும் பொருளைத் தருமாதலால் நடுவுநிலைமையாகுமா என்னும் சந்தேகத்தை நீக்கி நடுவுநிலைமைதான் என்பதை வலியுறுத்த வேண்டிச் 'சார்ந்தடியார் தாந்தானுச் செய்து பிறர் தங்கள் வினைதான் கொடுத்தல்' என ஆகாமிய வினையை விலக்குவதையும் கூட்டுவதையும் வேறு உவமையாக வைத்து எடுத்துக்காட்டி, அது போலப் பிராரத்த வினையினையும் இருவேறு வகைப் படச் செய்வன் எனக்கூறினர்.

சார்ந்த அடியார்க்குத் தன்னைப்போல ஆகாமிய வினையைக் கெடுத்துச் சாராத பிறருக்கு ஆகாமிய வினையைக் கொடுத்தல் இறைவனிடத்தில் உண்டு என்பதும், அவ்வாறு செய்தல் அநீதியன்று, நடுவு நிலைமையே யாம் என்பதும் எல்லாச் சமயத்தார்க்கும் ஒப்ப முடிந்தமையின், அவ்வாகாமிய வினையானது பிராரத்த வினையைப்பற்றிக் கூறும் இவ்விடத்துக்கு உவமை யாயிற்று. இதனை " தன்னை அடைந்தார்வினை தீர்ப்ப தன்றே தலையாயவர் தங்கடனுவதுதான்" எனவும்,

" சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால் - நலமிலன்" எனவும், வரும் தேவாரப் பகுதிகளாலும் உணர்க.

சார்ந்தாரைக் காத்தும் என்பதிலுள்ள உம்மை சிறப்பும்மை. சலம் - வஞ்சனை; இவ்விடத்தில் ஒரு பாற் கோடுதலை உணர்த்தி நின்றது. சார்ந்து என்னும் வினையெச்சம் அடியார் என்னும் குறிப்பு வினையாலணையும் பெயரைக்கொண்டு முடிந்தது. சார்ந்த என்னும் பெயரெச்சம் ஈறுதிரிந்து அடியார் என்னும் பெயரைக்கொண்டது எனினும் பொருந்தும். ஆதலான் எனவும், கொடுத்தலான் எனவும் ஆனுருபு விரித்துரைக்கப்பட்டது.

தானுச் செய்து என்றது தானுகச்செய்து என விரியும். ஆக என்பதுபோல என்னும் உவமப்பொருள் குறித்து நின்றது. ஆதலால் தானுக என்றதற்குத் தன்போல் என உரை செய்யப்பட்டது.

ஆகாமிய வினையாகிய முயற்சி தூலமாய் அறியப் படுதல் போலப் பிராரத்தவினை வந்து கூடுதல் தூலமாய் அறியப்படமாட்டாது; அதிசூக்குமமாய் வந்து கூடும். ஆதலால் அவ்வினையின் இயல்பை அறிதல் அரிது என்பதை அறிவிக்க வேண்டி 'ஆய்ந்து ஆர் முன்செய் வினையும்' என்றுர். ஆய்தல் - நுணுகுதல்; ஆதலால் ஆய் என்பதற்கு இங்கு நுணுகி எனப் பொருள் கொண்டுள்ளார். ஆர்கின்ற முற்செய்வினை ஆதலால் 'ஆர் முற்செய்வினை' என்பது வினைத் தொகையாம். முற்செய்வினையாவது பிராரத்தவினை.

முன்செய்வினையும் என்றதிலுள்ள உம்மை மேற் கூறிய ஆகாமிய வினையேயன்றிப் பிராரத்தவினையும் என்னும் பொருளைக் குறித்தமையால் இறந்தது தழுவிய உம்மை.

இங்ஙனம் இறைபணி நிற்பார்க்குப் பிராரத்த வினை உடலூழாய் வருத்தாது கழியும் எனவும், இறை பணி நில்லாதார்க்கு உயிரூழாய் வருத்துமெனவும் இங்ஙனம் இருவகையாகச் செய்தல்பற்றி முதல்வன் ஒருபாற் கோடுதலுடையவனுகான்; நடுவு நிலைமை யுடையவனேயாவன் எனவும் சாதித்தபொழுது, இறை பணி நிற்பார்க்குப் பிராரத்தவினை வருத்துதலுண்டு. அதற்குப் பிரமாணம் 'தினைத்துணையேனும் பொறேன் துயராக்கையின் திண்வலையே' (திருவாசகம்: நீத்தல்-39) என்று அவர்கள் கூறும் திருவாக்குகளேயாம். ஆதலால் பிராரத்தவினை இறைபணி நிற்பார்க்குச் செய்வோர் செய்திக்குத் தகுந்த பயனைப் (உடலூழாய் வருத்தாது) கழியும் என்பது பொருந்தாது. ஆதலால் பிராரத்தவினை உளதாகவே அப்பிராரத்த வினையின் அனுபவம்பற்றி நிகழும் ஆகாமியமும் பிறவிக்குக் காரணமாய் நிலைபெறும் என்றுகூற; ஒரு பாத்திரம் தன்னிடத்தில் வைத்து எடுக்கப்பட்ட பெருங்காயத்தி னின்றும் அவ்வாசனையை வாங்கிக்கொள்ளும். ஆகை யால் பெருங்காயத்தை எடுத்த பிறகு அப்பாத்திரத் தின்கண் அவ்வாசனை மங்கி மெலிதாய்ச் சுழன்று கொண்டிருக்கும். அதுபோல இறைபணியிலே நிற் பார்க்குப் பழக்க மிகுதியால் ஒரோவிடத்து ஞாதிருவை யான் என்றும் ஞேயத்தை அவன் என்றும் பிரித்துக்கா ணும் உயிருணர்வு முனைத்துத் தோன்றும். அங்ஙனம் தோன்றுதல்பற்றி, பிராரத்தவினையும் அவ்வினைக்கு இடமாகிய உடம்பு முதலிய மாயேயமும் மங்கி வாசனை யாய் மெலிதாய் வந்து தாக்கும். இறைபணி நிற்பவர் கள் சத்தாயுள்ள சிவமானபடியால் ஒரோவிடத்து அவ்வாசனை பற்றிப் பிறழ நேர்ந்தாலும் பிறழவிடாத அச்சாகிய சிவத்தை உணர்ந்துகொண்டு நிற்பார்கள். அந்த உணர்வால் பிராரத்த வினையும் அதற்கு இட மாகிய உடம்பு முதலிய மாயேயமும் வாசனையாய்த்

தாக்குதல் பற்றி உளதாகும் ஆகாமியவினை பிறவிக்கு வித்தாய் நிலைபெறாது தனக்கு இடமாகிய மாயையத் தோடு கெட்டொழியும் என்று பிராரத்தவினை தாக்கு தற்குக் காரணங்கூறி, அப்பிராரத்தவினை இறைபணி நிற்பார்க்குச் செய்வோர் செய்திப் பயனாய் (உடலூ ழாய்)க் கழியுமென்பதற்கு யாதொரு குற்றமுமில்லை என்று விளக்கி, ஏதுவை உதாரணத்தால் வலியுறுத் தருளினார் என்று உணர்க.

உதாரணம் வருமாறு :

இங்குளி வாங்கும் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும் - பின்செய்வினை
மாயையுடன் நில்லாது மற்றவன்றான் மெய்ப்பொருளே
ஆயவத னாலுணரும் அச்சு.

என்பதாம்.

இறைபணி நிற்கும் முத்தருக்கு ஆகாமியவினையை மேல்வினையாக ஏறாமற் கெடுத்தல் எதுபோல எனின், சூரியன் முதலியவற்றின் ஒளி இருளைக் கெடுக்குமாறு போலாம். ஒளி இருளை நீக்குதல் போல அச்சாகிய சிவத்தை உணரும் உணர்வு அவ்வாகாமியத்தை நீக்கும் என்க. புடைநூல் ஆசிரியராகிய ஸ்ரீ உமாபதி சிவனார் "தொல்லையின் வருதல் போலத் தோன்றிரு வினையதுண்டேல் அல்லொளி புரையு ஞானத் தழலுற அழிந்துபோமே (செய் : 89) எனச் சிவப்பிரகாசத்தில் கூறியதும் இக்கருத்துப்பற்றி என்றுணர்க.

இங்குளி என்பதில் இங்கு என்பது பெருங்காயம். உளி: ஐந்தாம் வேற்றுமை உருபு. தமிழ்மொழியாயின் இங்கு என்பது முற்றியலுகரம். அம்முற்றுகரம் உளி என்ற சொல் முன் வந்தமையால் கெட்டது. இவ்வாறு கெடுதல் இலேசாற் கொள்ளப்படும். 'உயிர்வரின்

உக்குறள் மெய்விட்டோடும்...முற்றுமற் றெரோவழி’ என்ற விதியால் முற்றுகரம் சில இடத்திற் கெடும் என் பது பெறப்பட்டது. இலேசு - ஏகதேசம்.

வாங்கும் என்பது வாசனை என்னும் சொல்லை விரும்பி நின்றது. ஆதலால் வாசனை என்பது வருவித் துரைக்கப்பட்டது. இங்ஙனம் வருவித்தலை அவாய் நிலை என்பர்.

மூண்டிடினும் என்றதனுல் மூளுதல் நிச்சயமன்று. ஆகவே வாசனையுள்ளவிடத்துத் தாக்கும்; வாசனை இல்லாத விடத்துத் தாக்காது என்பதாம். மாயை என்பதற்கு மாயையின் காரியமென்று பொருள்கொண் டுள்ளார். இங்ஙனம் பொருள் கொள்ளுதலை ஆகு பெயர் என்பர். மாயையின் காரியம் மாயேயம் எனப் பெயர்பெறும்.

மற்று என்பது பிறழவரினும் என்னும் வினையை மாற்றுதலால் வினைமாற்றுப் பொருளில் வந்துள்ளது.

அவன்தான் என்பதிலுள்ள தான் என்பது அநு வதித்தற்கண் வரும் இடைச்சொல்லாம். அநுவதித் தலாவது முன்பு சொன்னதை வேறொன்று கூறுதற் பொருட்டுப் பின்னரும் சொல்லுதலாம்.

பிறழவரும்பொழுதும் பிறழவிடாமையால் மெய்ப் பொருளாகிய சிவத்தை அச்சு என்று கூறியுள்ளார். இங்ஙனம் கூறுவதை உருவகம் என்பர். அச்சு பிறழ விடாது.

இங்ஙனம் பிராரத்தவினை தாக்குதற்குக் காரணமும், அது உடலூழாய்க் கழியுமெனவும், அப்பிராரத்த வினையால் உளதாகும் ஆகாமியவினை பிறவிக்கு வித் தாய் நிலைபெறாது கெடும் எனவும் சாதித்த பொழுது,

பிராரத்த வினையும் அதற்கு இடமாகிய உடம்புமுதலிய மாயேயமும் வாசனையாய்த் தாக்கும்பொழுதும் சிவமாகிய அச்சினை உணர்ந்துநிற்றல் எங்ஙனம் என்று வினவ, நெருப்பின் நடுவிலிருந்தும் வேவாமலிருப்பதற்குக் காரணமான அக்கினித்தம்பம் உடையவர்கள் அந்நெருப்பின் நடுவிலிருந்தாலும் தம்முடைய திறமை கெடாமலிருப்பார்கள் அதுபோலவும்; குதிரையைச் செலுத்துதற்குரிய பாகனூல் கற்று வல்லவர்கள் அக்குதிரையின் வேகத்துட்பட்டாலும் தம்முடைய திறமை கெடாமலிருப்பார்கள் அதுபோலவும்; ஐம்புலன்களில் அகப்படாமல் இருப்பதற்கு உபாயம் எது என்று ஆராய்ந்து முதல்வனுடைய திருவடியாகிய அச்சை உணர்ந்து நிற்க வல்லவர்கள், பிராரத்த வினையும் அதற்கு இடமாகிய மாயேயமும் வாசனையாய் மூளுதல் பற்றி ஐவகைப்பட்ட விடயங்களிற் சென்றூர்களாயினும் அதனுல் தம்முடைய திறமையிழந்து பந்தமுறூர் என்று உவமான முகத்தால் சிவமாகிய அச்சை உணர்ந்து நிற்றலை விளக்கி உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினர் என்று உணர்க.

உதாரணம் வருமாறு :

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினும் - எண்ணி
அரனடி ஓர்பவர் ஐம்புலனில் சென்றும்
அவர்திறல் நீங்கார் அதற்கு.

என்பதாம்.

அரன் அடி ஓர்பவர் உவமேயம்; நற்றவரும் பாகரும் உவமை. உவமேயத்துக்குக் கூறிய அவர் திறல் நீங்காரென்னும்வினை, நற்றவர் பாகர் என்னும் உவ்மையினும் சென்று பொருந்துமாதலால் அவ்வாறு உரைசெய்யப்பட்டது. நீர்கீழ் என்பது கீழ்நீர் என்று

முன்பின்னுக வந்ததுபோல அனல் நள் என்பது நள் அனல் என்று முன்பின்னுக வந்தது. நள் அனல் என்பது நண்ணனல் எனமருவிற்று. இது ஆறும் வேற்றுமைத்தொகை. நள் அனல் என்றிருக்க வேண்டுவது செய்யுளின் எதுகை நோக்கி நண்ணனல் என மருவி நின்றது. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் கோயில் திருக்குறுந்தொகையில் நீனுலகெலாம் என்றிருக்க வேண்டுவது " நீணுலகெலாம் " என நின்றுற்போல. நண் அனல் எனக் கொண்டு தம்மால் நண்ணப்படும் அனல் என்று உரைப்பினும் அமையும். நண்ணப்படுதல் - பொருந்தப்படுதல்.

பண்ணுதல் - கதிப்பித்தல்; அதாவது நால்வகைக் கதிகளோடு நடக்கச்செய்தல். நற்றவர் தம்மினும் பாகரினும் என்ற விடத்துள்ள இன் உருபு இரண்டும் உவம உருபுகள். திறல் நீங்கார் என்னும் உவமேய வினையை உவமானத்திலும் கூட்டியுள்ளார். அதற்கு என்பது உருபு மயக்கம் ஆதலால் அதற்கு என்பதற்கு அதனுல் எனப்பொருள் கொண்டுள்ளார். சென்றும் என்பதிலுள்ள உம்மை சிறப்பும்மை.

இங்ஙனம் பிராரத்தவினையும் அவ்வினைக்கு இடமாகிய மாயேயமும் வாசனையாய் வந்து தாக்கும் பொழுதும் சிவமாகிய அச்சை உணர்ந்து நிற்றலை உவமானத்தால் சாதித்தபொழுது, சத்தைச்சார்ந்து சத்தாயும், அசத்தைச்சார்ந்து அசத்தாயும் இங்ஙனம் சார்ந்ததன் வண்ணமாய்ச் சதசத்து எனப்படும் தன்மையுடையவர்கள் முதல்வனது திருவடியையுணர்ந்து நின்றுலும் ஐம்புலன்களில் சென்றபொழுது அந்த ஐம்புலன்களினுல் பந்தமுருமல் முதல்வனது திருவடியை உணர்ந்து நிற்றலாகிய தம்முடைய திறமை உடையவர் ஆவது எங்ஙனம் என்று வினுவ; சத்தைச்

சார்ந்து சத்தாயும் அசத்தைச் சார்ந்து அசத்தாயும் இங்ஙனம் சார்ந்ததன் வண்ணமாய் நிற்றலால் சத சத்து என்னும் தன்னுடைய சிறப்பியல்பை உணர்ந் தவர்கள் சத்தாகிய முதல்வன் திருவருளாலல்லாது ஒன்றையுங் காணாராய், அம்முதல்வன் திருவருளின் வழி நின்று காணுவார்களானல், அப்பொழுது பாச மாகிய அசத்தினை, விரும்பார்கள். ஆகையால் சத் தாகிய முதல்வனைக் கூடி நிற்பவர்கள் கோபமிக்கு எரிகின்ற நெருப்பின்முன் இருள் சத்திகெட்டு நிற்றல் போலச் சத்தாகிய சிவத்தினெதிரில் தன்னுடைய சத்தி யோடு நிற்கமுடியாத அசத்தாகிய ஐம்புலனிடத்து எய்தமாட்டார்கள் என்று சார்ந்துள்ள சத்துப்பொரு ளின் விசேடத்தைக்கூறி, உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினர் என்றுணர்க.

உதாரணம் வருமாறு :

சதசத்தா மெய்கண்டான் சத்தருளில் காணில்
இதமித்தல் பாசத்தில் இன்றிக் - கதமிக்[கு)
எரிகதிரின் முன்னிருள்போல் ஏலா அசத்தின்
அருகணையார் சத்தணைவார் ஆங்கு.

என்பதாம்.

மெய்கண்டான் என்று ஒருமையாகவும் சத்து அணைவார் என்று பன்மையாகவும் வருதலினல் ஒரு மைப்பன்மை மயக்கம் என்று கொள்ளலாம் எனின், மெய்கண்டான் காணில் இன்றி என்றும், சத்து அணைவார் அருகு அணையார் என்றும் வேறு வேறு முடிதலால் ஒருமைப்பன்மை மயக்கம் அன்று.

இதமித்தல் என்பது இதம் என்னும் பெயரடியாகப் பிறந்த தொழிற்பெயர். இதம் செய்தல் - பற்றுச் செய் தல். இன்றி என்னும் குறிப்பு வினையெச்சம் காரணப்

பொருளில் வந்துள்ளது. ஆதலால் இன்மையால் என்று பொருள் கொண்டுள்ளார். அருளின் என்பதிலுள்ள இன்னுருபு ஏதுப்பொருளில் வந்துள்ளது.

அசத்தினை விரும்பாமைக்குக் காரணம் கூறுவார் 'கதமிக்கு எரிகதிரின்முன் இருள்போல் ஏலா அசத்து' என்ருர்; அதாவது கோபமிக்கு எரிகின்ற நெருப்பின் முன்னர் இருள் சத்திகெட்டு நிற்றல்போலச் சத்தெதிர் தன்னுடைய சத்தியோடு நிற்க முடியாதது அசத்து ஆதலால் அசத்தினை விரும்பார் என்பதாம்.

கதம் மிக்கு எரிகதிர் என்பது ஒப்புமைபற்றி வந்த உபசார வழக்கு. அதாவது கதமிலதாகவும் கத்முடையதுபோல மிக்கெரிதல்பற்றிக் கூறினமையால் ஒப்புமைபற்றிவந்த உபசார வழக்காயிற்று. "எல்லையில்லவன் எரி துள்ளினுலென வெகுண்டான்" (பெரிய புராணம் - அமர்நீதி: 26) என்பதனுலும் ஒப்புமை உணரப்படும்.

இதனுல் சத்தாகிய சிவமும் அசத்தாகிய பாசமும் தம்முள் சமமல்ல ஆதலால் முதல்வனது திருவடியை உணர்ந்து நிற்பவர் ஐம்புலனில் சென்ருலும் அதனுல் முதல்வன் திருவடியை உணர்ந்து நிற்றலாகிய தமது திறமை நீங்கார் என்று முன்னர்க் கூறியது வலியுறுத்தப்பட்டது.

ஏகனுகி நிற்றலினுல் மலம் இலதாதலும், இறைபணி நிற்றலால் மாயையும் வினையும் இலவாதலும் பெறப்பட்டன. ஆதலால் 'மலமாயை தன்னொடு வல்வினை இன்றே' என்பதனை வேறு அதிகரணமாக ஆசிரியர் கூறிலர் என்றுணர்க. ஆயினும் அதன்கண் சந்தேகம் உண்டாகாமைப் பொருட்டுப் பன்னிரண்டாஞ் சூத்திரத்து முதலதிகரணத்தில் சம்பந்தம்பற்றி

வேறு வைத்துக் கூறுகின்றாராதலின் அதிகரணத்திற் குரிய ஐயப்பாடு முதலியன எல்லாம் அவ்விடத்துக் காண்க.

இச்சூத்திரத்தினுலும் அதிகரணங்களினுலும் கூறி முடித்த தொகைப்பொருள்: ஏழாஞ் சூத்திரம்முதல் மூன்று சூத்திரங்களினுலும் சாதன இயல் கூறி முடித்து இப்பத்தாஞ்சூத்திரம்முதல் மூன்று சூத்திரங்களினுல் பயனியல் கூறத்தொடங்கிப் பாசநீக்கமும் சிவப்பேறும் என்னும் பயன் இரண்டனுள் பாசநீக்கம் ஆன்மசுத்தி யின் பயன் ஆதலால் ஒன்பதாஞ் சூத்திரத்தில் ஆன்ம சுத்தி கூறினமையின் அதன் பயனுகிய பாசநீக்கத்தில் ஆணவம் கன்மம் மாயை என்னும் பாசம் மூன்றனுள் முதல்வனுடன் ஏகனுய் நிற்றலால் ஆணவமல நீக்க மும் அவன் அருள் வழியாகிய இறைபணி நிற்றலால் மாயை கன்மங்களின் நீக்கமும் உண்டாகுமென இப் பத்தாஞ்சூத்திரத்தாற் கூறினுர். கூறவே, ஒன்பதாஞ் சூத்திரத்திற் கூறியவாறு ஞானக்கண்ணுல் முதல் வனைக்கண்டு ஆன்மசுத்தி பெற்றதேபோதும் அதன் மேற் செய்ய வேண்டுவது ஒன்றுமில்லையெனச் சிவ சமவாத சைவர்கூற, முதலதிகரணத்தால் அவரை மறுத்து முதல்வனைக் கண்டவிடத்தும் கண்டோம் என்னும் போதம் அருமையால் அப்போதமாகிய யான் எனது என்னும் மயக்கம் அறுதற்பொருட்டு முதல்வ னிடத்து ஏகனுகி நிற்கவேண்டும் எனக் கூறினுர். கூறவே, உடம்பு உள்ள அளவும் பிராரத்தவினையும் அதுபற்றி உண்டாகும் முயற்சியாகிய ஆகாமிய வினையும் நீங்கா; ஆதலால் ஏகனுகி நிற்றல் எவ்வாறு கூடுமெனச் சுத்த சைவரும் அவருக்குக் கீழ்ப்பட்டவ ருங்கூற, இரண்டாம் அதிகரணத்தால் அவரை மறுத்து இறைவன் திருவருளை இன்றித் தனக்குச் செயலில்லை என அறிந்து எச்செயலும் அவன் செய

லாகவே காணும் இறைப்பணியில் நிற்பவர்க்குப் பிரா ரத்த வினை உயிரைத் தாக்காமல் முதல்வன் சந்நிதியில் உடலூழாகவும் ஆகாமியவினை வறுத்த வித்துப் போல் மேற்பிறவியை உண்டுபண்ணுமலும் கழியும் என்றும், . இறைபணியில் நிற்பவர்க்கு அவ்வாறு வினையை ஒழித்து ஏனையோருக்கு வினையைக் கூட்டுவித்தலால் இறைவன் நடுவு நிலைமைக்குக் குறைவில்லையென்றும், இறைபணியில் நிற்பவர்க்கும், ஏகதேசத்தில் பிராரத்தவினை தாக்குதல் பழக்க வாசனைபற்றியே ஆதலின் உண்மையுணரும் ஞானத்தால் அப்பழக்க வாசனைபற்றி ஆகாமியவினை ஏறுமாறில்லையென்றும், அந்த ஞானம் பழக்க வாசனையால் பிறழாது என்றும், பிறழாமைக்கு ஏது சத்தின்முன் அசத்து முனைத்து நின்று இன்பம் செய்யாமையே என்றும் கூறினர்.

# பதினொராம் சூத்திரம்

## உண்மை அதிகாரம் — பயனியல்

காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

இச்சூத்திரத்தின் கருத்து யாதெனின், பரமேசுர னது சீபாதங்களை அணையுமாறு உணர்த்துதல் நுதலிற்று என்பதாம்.

இக்கருத்துரையின் பொருளாவது, ஏகனாகி இறைபணி நிற்பவர்களுக்கு அறிவு இச்சை செயல்கள் விடயித்தற்குரிய இயைபு ஆண்டில்லாமையால் விடயமாவது ஒன்றும் இல்லையென்று சிலர்கூற, விடயித்தல் இல்லாதபொழுது அறிவு இச்சை செயல்கள் புத்தர்கள் கூறும் ஆலய விஞ்ஞானம் போலச் சூனியமாய் முடியும். இங்ஙனம் அறிவிச்சை செயல்களாகிய குணம் சூனியமாகவே அறிவிச்சை செயல்களாகிய குணத்தையுடைய குணமாகிய உயிரும் சூனியமாய் முடியும். இங்ஙனம் உயிர் சூனியமாய் முடிதல் பொருத்தமுடையது அன்று ஆதலால் குணமாகிய அறிவு இச்சை செயல்கள் இயைபு பற்றி விடயிக்கும் முறைமையை உணர்த்துமுகத்தால் பாசவீடு சிவப்பேறு என்னும் பயன் இரண்டனுள் கூறுது எஞ்சி நின்ற சிவப்பேறடைதலாகிய நிட்டையின் இயல்பை உணர்த்துதல் என்பதாம்.

பாசவீடு சிவப்பேறு என்னும் பயனிரண்டனுள் முற்சூத்திரத்தில் பாசவீடு கூறி இச்சூத்திரத்தில் சிவப் பேறு கூறுதலால் இவ்விரண்டு சூத்திரமும் சம்பந்தம் உடையன என்பது பெறப்படும்.

ஏகனுகி இறைபணி நிற்பவர்கட்கு இனிச் செய்ய வேண்டியது ஒன்றும் இன்று ஆதலாலும், இருள் நீங்குதலும் ஒளி விளங்குதலும் ஒரே காலத்தில் நிகழு தல் போலப் பசுத்துவ நீக்கமும் (மலம் நீங்குதலும்) சிவத்துவ விளக்கமும் (சிவத்தன்மை விளங்குதலும்) முன்னும் பின்னுமாக நிகழாது ஒரே காலத்தில் நிகழ் வனவாதலால் வேருக வைத்து ஓதுதல் பொருந்தாது ஆதலாலும், முதனூலாகிய சிவஞான போதத்தில் சிவப்பேறு பத்தாம் சூத்திரத்துள் மலநீக்கத்தோடு ஒன்ருக வைத்து ஓதப்படுகின்றது ஆதலாலும், சிவப் பேற்றை மலநீக்கத்தைக்கூறும் பத்தாம் சூத்திரத்துள் கூருது இச்சூத்திரத்துள் வேருகவைத்து ஓதுதல் பொருந்தாது எனின், ஏகனுகி இறைபணி நிற்பது துரிய நிலையிலுள்ள அருள் நிலை ஆகும்.

ஆதலால் மலம் நீங்கிய அளவில் சுகப்பிரபை (சுகத்தின் சிறுதோற்றம்) மட்டும் விளங்குமே யல்லா மல் துரியாதீத நிலையிலுள்ள சிவத்துவ விளக்கம் என்று கூறப்படும் பரமசுகம் விளங்காது. அப்பரம சுகம் அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யாமை யாகிய இறைபணியில் நிற்றலால் மட்டும் விளங்காது. ஆதலால் அவ்விடத்துச் செய்யக்கடவது ஒன்று உண்டு என்பது பெறப்படும் ஆதலாலும், இருள் நீங்குதலும் ஒளி விளங்குதலும் ஒரேகாலத்தில் நிகழு தல்போல் பாசமாகிய மலநீக்கமும் அருள் விளக்க மும் ஒரே காலத்தில் நிகழுமே யல்லாமல் ஆனந்த விளக்கமும் உடனிகழாது ஆதலாலும், அருள் விளக்

க்த்திற்கும் ஆனந்த விளக்கத்திற்கும் உரிய வேறு பாடு பின்பு கூறப்படும் ஆதலாலும், முதல் நூலாகிய வடமொழிச் சிவஞான போதத்துப் பத்தாம் சூத்தி ரத்தில் பாசம் நீங்குதலே முத்தியாகும் என்று கூறும் வாதிகளை மறுத்தற்பொருட்டு, பாசம் நீங்கப் பெற்றவன் சிவப்பேருகிய சுவாநுபூதியை உடை யவனுவான் என்று பதினொராஞ் சூத்திரத்திற்குத் தோற்றுவாயாகக் கூறியருளிச் சுவாநுபூதியை அடை தற்கண் ஓதற்பாலன எல்லாவற்றையும் பதினொராஞ் சூத்திரத்துள் கூறுகின்ருர் ஆதலாலும், ஒன்பதாஞ் சூத்திரத்துள் எடுத்துக்கொண்ட ஆன்மசுத்தி பத்தாஞ் சூத்திரத்தில் சென்று இயைந்து முடிவு பெற்றது போலப் பத்தாம் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட சுவாநுபூதிநிலை பதினொராஞ்சூத்திரத்தில் சென்று இயைந்து முடிவு பெறுகின்றது. ஆதலால் மயங்கா திருத்தற் பொருட்டு வடமொழிப் பத்தாஞ்சூத்திரத்தில் கூறிய சுவாநுபூதிமானுவன் என்பதனை 'அரன்கழல் செலும்' என்று பதினொராஞ் சூத்திரத்தில் கூறி அருளினர் ஆதலாலும், மொழிபெயர்ப்பால் நூல் செய்யப்புகுந்த ஆசிரியர் முதனூலுக்கு மாருகக்கூருர் ஆதலாலும், முதனூலில் பத்தாஞ்சூத்திரத்தில் கூறிய 'சுவாநுபூதிமான்' என்பதனைப் பதினொராஞ்சூத்திரத் தில் 'பத்திசெய்க' என்பதன்பின் கூட்டி உரைத்தல் வேண்டும் என்பது பெறப்பட்டது.

இக்கருத்துப்பற்றியே மெய்கண்டதேவர்; பத்தாஞ் சூத்திரம் பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்திற்று எனவும், பதினொராஞ் சூத்திரம் பரமசிவனது சீபாதங் களை அணையுமாறு உணர்த்திற்று எனவும் கருத்துரை செய்தருளினர். ஆதலால் பொருந்துமென்று உணர்க என்பதாம்.

சிவபெருமான் திருவடியைக் கூடுதல் இச்சூத்திரத்தின் கருத்தாயின் மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு ஏகனுகி இறைபணி நின்றவர் சிவபெருமான் திருவடியை அடைந்தவரேயாதலால் அவர்க்கு மேற்செய்யவேண்டியது ஒன்று இல்லாமையானும், இருள் நீங்கும்பொழுதே ஒளி விளங்குமாறுபோல மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு பாசம் நீங்கியபொழுதே சிவபெருமான் திருவருள் தடையின்றி விளங்குமாதலால் சிவபெருமான் திருவடியடைதலைப்பற்றி வேறு கூற வேண்டாமையானும் இச்சூத்திரம் வேண்டுவதில்லை. அன்றியும் முதல் நூலாகிய வடமொழிச் சிவஞான போதத்தில் சுவாநுபூதியாகிய சிவபெருமான் திருவடி அடைதலைப் பத்தாஞ் சூத்திரத்துள் பாசநீக்கத்துடன் ஒன்ருகவைத்தே கூறுதலானும் அதனை இச்சூத்திரத்தில் வேருக வைத்துக் கூறுதல் பொருந்தாது எனின்,

ஏகனுகி இறைபணி நிற்பது நின்மல துரியநிலையாகிய அருள் விளக்கமேயாம். அத்துரியநிலையில் பாசம்நீங்கிய உதவியால் சிவபெருமான் திருவடியாகிய சுகத்தின் ஒளிமட்டும் விளங்குவதன்றிச் சுகம் விளங்குவதில்லை. சிவபெருமான் திருவடியைக் கூடி இன்புறுதலாகிய அப்பரமசுகம் நின்மல துரியாதீத நிலையின்கண்ணேதான் விளங்கும். ஆதலால் பரமசுக விளக்கம் மேலைச் சூத்திரத்து இரண்டாமதிகரணத்து ஏதுவிற் கூறியவாறு அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யாமையாகிய இறைபணி நிற்றல் மாத்திரையானே விளங்காது என்பது பெறப்பட்டது. படவே, அப்பரமசுகம் விளங்குதற்பொருட்டு இறைபணி நின்றதன்மேலும் செய்யவேண்டியது உண்டென்பது தானே விளங்கும். அச்செயல் திருவடி அடைதலேயாம். ஆதலால் திருவடி அடைதலைக் கூறும் இச்சூத்திரம் வேண்டும் என்க.

திருவடி சுகம்தரும் என்பதை "மாசில் வீணையும் மாலை மதியமும், வீசு தென்றலும் வீங்கிள வேனிலும், மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே, ஈச னெந்தை இணையடி நீழலே" என்னுந் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாக்கானும் அறிக. இப்பாசுரத்தால் நீற்றறையில் வைக்கப்பெற்ற சுவாமிகளுக்குத் திருவடி யைக்கூடிய நிட்டையினுல் அந் நீற்றறை, தடாகமும் இளவேனிற் காலத்துத் தென்றலும் சந்திரனும் வீணை யும் போன்று மிகக்குளிர்ந்தமை பெறப்பட்டவாறு அறிக.

அன்றியும், இருள் நீங்கியவுடன் கண்ணுக்குப் பொருளின் விளக்கம் மட்டும் உண்டாகுமே யன்றிப் பொருளின் அநுபவம் உண்டாகி இன்புறுதலில்லை. அநுபவமுண்டாகி இன்புறுதற்குப் பொருளைக் கண் பற்றல் வேண்டும். இருள் நீக்கமே பற்று முயற்சியை உண்டுபண்ணுது. உண்டுபண்ணுமாயின் இருளில் லாத விடத்துள்ள பொருளை அவ்விடத்துள்ள எல் லாக் கண்களும் பற்றல்வேண்டும். அவ்வாறு பற்றுவ தில்லை. ஆதலால் இருள்நீக்கம் வேறு; பற்றும் முயற்சி வேறு. பற்றும் முயற்சிக்கு இருள்நீக்கம் உதவியாகும். அவ்வுதவியைக்கொண்டு பற்றும் முயற்சியைச்செய்தே பொருளாலாகிய இன்பத்தைக் கண் அனுபவிக்க வேண்டும். அவ்வாறே மேலைச்சூத்திரத்திற் கூறிய வாறு பாசநீக்கத்தினுல் அருள் விளக்கம் உண்டாத லேயன்றி ஆனந்த விளக்கம் உண்டாதலில்லை. அருள் விளக்கமாவது முதல்வனையின்றித் தான் தனித்து நிற்பதில்லை யெனவும், முதல்வன் செயலையின்றித் தனக்குச் செயலில்லை யெனவுங் காண்டல். அவ்வாறு காணுங்கால் அறிவுஞ் செயலுந் தொழிற்படும். இச்சை தொழிற்படுவதில்லை. ஆனந்த விளக்கமாவது முதல் வன் உடனுய்நின்று அறிவித்தலே யன்றித் தனக்காக

அறிந்தும் வரும் பேருபகாரத்தை நினைந்து அவனிடத்து அன்பு மிகுதிப்பட அவ்வன்பு மிகுதியால் அவனோடு கலந்து அழுந்துதல். அவ்வாறு அழுந்துங்கால் அறிவு இச்சை செயல் மூன்றுந் தொழிற்படும். இவ்வாறு அருள் விளக்கத்தில் அறிவு செயல் இரண்டுந் தொழிற்படுதலும் ஆனந்தவிளக்கத்தில் அறிவு இச்சை செயல் மூன்றுந் தொழிற்படுதலுமே அவ்விரண்டற்கும் வேறுபாடெனவும், ஆனந்த விளக்கத்திற்கு அருள் விளக்கம் உதவியாமெனவும், அவ்வுதவியைக்கொண்டு முதல்வனைப்பற்றியே ஆனந்த விளக்கம் உண்டாகுமெனவும் இச்சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்திற் கூறப்படும். இதனானும் இச்சூத்திரம் வேண்டுமென்க.

ஆயினும் முதல் நூலாகிய வடமொழிச் சிவஞான போதத்தில் பத்தாஞ் சூத்திரத்திலேயே சுவாநுபூதி கூறியிருக்க அதற்கு மாறாக இத்தமிழ்நூலில் பதினொராஞ் சூத்திரத்தில் சுவாநுபூதியைக் கூறுதல் எவ்வாறு பொருந்துமெனில், முதல்நூல் பத்தாம் சூத்திரத்தில் பாசநீக்கம் பண்ணுமாறு உணர்த்தி பாசநீக்கமே முத்தி எனக்கொண்ட வாதிகளை மறுத்தற்பொருட்டுப் பாசநீக்கம் பெற்றோன் பாசப்பற்று நீக்கத்தின் பொருட்டு திருவடியடைதலாகிய சுவாநுபூதியுடையவனுவனெனத் திருவடி அடைதலைக் கூறும் பதினொராஞ் சூத்திரத்திற்கு ஆரம்பம் செய்துகொண்ட அவ்வளவே பத்தாம் சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளது. சுவாநுபூதி உண்டாவதற்குச் செய்ய வேண்டுவன எல்லாம் பதினொராஞ் சூத்திரத்திலேயே அம்முதனூலில் கூறப்பட்டிருக்கின்றன. ஒன்பதாம் சூத்திரத்தில் எடுத்துக் கொண்ட ஆன்மசுத்தி செய்யும் முறைமை பத்தாம் சூத்திரத்திற்சென்று பாசநீக்கம் கூறுதலால் முற்றுப் பெற்றாற்போலப் பத்தாஞ் சூத்திரத்தில் எடுத்துக் கொண்ட சுவாநுபூதிநிலை பதினொராஞ் சூத்திரத்திற்

சென்று திருவடி அடைதல் கூறுதலால் முற்றுப் பெறுகின்றது. அவ்வாறு ஒரு சூத்திரப்பொருள் அடுத்த சூத்திரத்திற் சென்று முற்றுப்பெறுமோ என மலையா திருத்தற்பொருட்டு முதல் நூல் பத்தாம் சூத்திரத்தில் சுவாநுபூதிமானவன் என்பதனை ஆசிரியர் இந்நூல் பதினோராஞ் சூத்திரத்தில் அரன் கழல் செலும் என மொழி பெயர்த்துச் சுவாநுபூதி உண்டாவதற்கு முதனூல் பதினோராஞ் சூத்திரத்திற் கூறிய பத்திசெய்க என்றதனோடு உடன்வைத்து அயரா அன்பினரன் கழல் செலுமென ஓதினர். ஆதலால் மாறுகாமையிற் பொருந்தும் என்க.

அன்றியும் நூல் செய்தற்குரிய விதி தொகுத்துச் செய்தல், விரித்துச்செய்தல், தொகுத்தும் விரித்தும் செய்தல், மொழி பெயர்த்துச் செய்தல் என நான்கு வகைப்படும். இதனை "தொகுத்தல் விரித்தல் தொகை விரி மொழிபெயர்ப் - பெனத்தகு நூல் யாப் பீரிரண் டென்ப" என்னும் நன்னூல் சிறப்புப்பாயிரம் நான்காவது சூத்திரத்தால் அறிக. அந்நால்வகை விதியினுள் மொழிபெயர்த்தலென்னும் விதியின்படி நூல் செய்து உரைக்கப்புகுந்த ஆசிரியர் முதல் நூலாகிய வடமொழிச் சிவஞான போதத்தோடு மாறுபட உரையார் என அறிக. மொழிபெயர்த்துச் செய்தார் என்ற இதனானே முதனூலாகிய வடமொழிச் சிவஞானபோதம் பத்தாஞ் சூத்திரத்தில் சுவாநுபூதிமான் எனச் சும்மா கூறியதனைப் பதினோராஞ் சூத்திரத்தில் பத்திசெய்க என்றதன் பின்னாகக் கொண்டுகூட்டிவைத்துரைத்தலே வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்தில் சுவாநுபூதிமான் எனக் கூறியதன் கருத்து என்பதூஉம் பெறப்பட்டது. ஆதலினாற்றான், வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்தில் சுவாநுபூதிமான் எனவும் பதினோராஞ் சூத்திரத்தில் பத்திசெய்க எனவும் கூறியிருப்பனவற்றை மொழி

பெயர்க்குங்கால் பத்திசெய்க என்றதை அன்பின் எனவும், சுவாநுபூதிமான் என்றதை அரன்கழல் செலும் எனவும் இந்நூல் பதினொராஞ் சூத்திரத்தில் ஒன்றாக வைத்திருக்கின்றனர் என்க. பத்தியிலன்றிச் சுவாநுபூதி உண்டாகமாட்டாது; ஆகலின் அவ்வாறு சேர்த்து மொழிபெயர்த்தாரென அறிக. சுவாநுபூதி நிலை பத்தாஞ்சூத்திரத்தில் உண்டாகவில்லை என்பது பற்றியே பத்தாஞ்சூத்திரத்திற்குப் பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்திற்று எனவும், பதினொராஞ் சூத்திரத்திற்குப் பரமசிவனுடைய சீபாதங்களை அணையுமாறு உணர்த்திற்று எனவும் கருத்துரைசெய்தார்.

இனி, காட்டக் காணுந்தன்மையுடையது கண். கண் உருவத்தைக் காணும்படி உயிர் அக்கண்ணோடு ஒருங்குகூடி நின்று உருவத்தைக் கண்ணுக்குக்காட்டித் தானும் அவ்வுருவத்தைக் காணும். அதுபோல உயிர் அறிவிக்க அறியுந்தன்மை உடையது. உயிர் விடயங்களை அறியும்படி முதல்வன் அவ்வுயிரோடு ஒருங்கு கூடிநின்று விடயங்களை அறிவித்துத் தானும் அவ் விடயங்களை அறிந்துவருவன். ஆதலால், உயிர் அத்துவிதமாய் நின்று உதவிசெய்துவரும் கருணையை மறவாமல் கடைப்பிடித்துச் செய்யும் அன்பினால் அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்த பூதியை அடையும் என்பதாம்.

உவமானத்திற்கு ஓதிய காணும் என்னும் அடைமொழியை உவமேயமாகிய உள்ளத்தோடு கூட்டி உரை செய்துள்ளார். கண்டு என்னும் உவமேயத்தினது வினையை உளம்என்பதனோடு அதாவது காட்டிக் காணும் உளம்போல் ஒன்றுகூட்டி உரைத்துள்ளார். காண என்பது உவமானத்தினும் உவமேயத்தினும் கூட்டி உரைக்கப்பட்டது.

சூத்திரத்தில் வந்துள்ள கண்டு காட்டல் என்பது காட்டிக்காணல் என மாற்றி உரைக்கப்பட்டது. இக் கருத்துப்பற்றி வழிநூலாசிரியராகிய ஸ்ரீ அருணந்தி சிவாசாரியரும் "காட்டிக்கண் டிடுமா போலக் ... காட்டிக் கண்டிடுவன்" (சித்தி. சூ. 11: 1) என்று கூறியருளினர் என்றுணர்க.

அயராமைக்குச் செயப்படுபொருள் அத்துவிதமாய்நின்று உதவிசெய்துவரும் கருணையாகும். செயப்படுபொருளைச் சூத்திரத்தில் கூறுமையால் வருவித்து உரைத்தருளினர் என்றுணர்க.

அயரா அன்பு என்பதற்கு அயராமையால் உண்டாகிய அன்பு என்று பொருள்கொள்க. அயராமை - மறவாமை. மறவாமை காரணம்; அதனாலுண்டாகிய அன்பு காரியம். இக்கருத்துப்பற்றி வழிநூலாசிரியரும் "இத்தை – ஆயும் அறிவுடையனாய் அன்பு செய்ய" (சித்தி. சூ. 11: 1) என்று கூறியருளினர்.

உள்ளத்தை என்பது உருபு மயக்கம்; ஆதலால் உள்ளத்துக்கு எனப் பொருள்கொண்டுள்ளார். உள்ளம் - உயிர்.

அறிவு இச்சை செயல்களின் நிகழ்ச்சிகள் முறையே அயராமையும் அன்பும் செலவும் ஆம். இவைகள் முறையே ஒன்றுக்கொன்று காரண காரியங்களாய் அதாவது அயராமை காரணம், அன்பு காரியம், அன்பு காரணம் செலவு காரியமாய் அத்துவிதமாய் உதவி செய்யும் கருணையாகிய ஒரு பொருள்மேல் நிகழும் என்பதனை விளக்குவார் 'அயரா அன்பின் அரன்கழல் செலுமே' என்று கூறியருளினர் என்க.

கண்ணானது உயிரினுடைய அறிவின் கலப்பின்றி உருவத்தைக் காணமாட்டாது; உயிரின் அறிவும் கண்

ணொளியுங் கலந்து உருவத்தைக் காணுங்கால் உயிரின் அறிவு தன்னறிவென்றும் கண்ணொளி என்றும் பிரிப் பின்றி நிற்கும்; நிற்க உயிரால் கண் கண்ட அவ்வுரு வத்தைக் கண்கண்டதென்றும் கண்ணை இடமாகக் கொண்டு நின்ற உயிர் கண்டதென்றும் பிரித்தறிய வாராது; கண்ணினுடைய காணுதற்றொழிலும் உயிரி னுடைய காணுதற்றொழிலும் ஒன்றனையொன்றுவிடாது அத்துவிதமாகி இரண்டும் ஒன்ருகவே நிகழும். அது போல, முதல்வனையின்றித் தனித்து நில்லாத உயிர் ஒருபொருளை அறியுங்கால் முதல்வனுடைய சிற்சத்தி யானது உயிரின் அறிவோடு கலந்து முதல்வனுகிய தன்னறிவென்றும் உயிரின் அறிவென்றும் பிரிப்பின்றி உடனாய் நிற்ப, முதல்வனும் உயிருடன் அவ்வாறு கலந்து நின்று உயிருக்கு அறிவித்த ஒருபொருளை அவ்வான்மா அறிந்ததென்றும் அவ்வான்மாவை இட மாகக்கொண்டு நின்ற தான் அறிந்ததென்றும் பிரித் தறிய வாராது. உயிரின் அறிவும் முதல்வனுடைய அறிவும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாகி இரண்டும் ஒன்ருகவே நிகழும். இவ்வாறு கலந்து நின்று காட்டியுங் கண்டும் செய்துவரும் இவ்வுபகாரம் பெத்தமுத்தி இரண்டினும் ஒருதன்மையாய் நிகழும்.

ஆதலால் மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு ஏகனுகி இறைபணி நிற்கும் உயிர், முதல்வன் அத்துவிதமாய்க் கலந்துநின்று காட்டியுங் கண்டும் உபகரித்து வரும் உரிமையை நோக்குமாயின் நோக்குந்தோறும் நோக் குந்தோறும் அம்முதல்வனிடத்துச் செல்லும் இச்சை அடங்காது அதிகப்படும். படவே, அவ்விச்சையே பேரின்பமாகி விளங்கித் தோன்றும். அவ்வாறு விளங்கித் தோன்றும் பேரானந்தத்தை உயிர் அநு பவித்தல்கூடும். கூடவே அத்துவிதமாய் நிற்கும் உரிமையை நோக்குதலால் அறிவின் தொழிலும்,

இச்சை அதிகப்படலால் இச்சையின் தொழிலும், பேரா னந்தத்தை அநுபவித்தலால் செயலாகிய கிரியாசத்தி யின் தொழிலும் நிகழுமென்பது பெறப்படும். படவே, அறிவு இச்சை செயல்கள் மூன்றும் முத்திநிலையில் தொழிற்படாதென்ற வாதிகட்குத் தொழிற்படுமென்று கூறி, தொழிற்படினும் தொழிற்பட்டதாகப் பிரித்தறிய முடியாத நின்மல துரியாதீத நிலையின் இயல்பு கூறிய வாறும்.

அத்துவிதமாவது பேதப்பொருள் இரண்டும் தம் முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம். சம்பந்த மாவது சையோகம், சையுத்த சமவாயம், சையுத்த சம வேத சமவாயம், சமவாயம், சமவேதசமவாயம், விசே டண விசேடியத்தன்மை என அறுவகைப்படும். அவற் றுள், கண்ணினுல் குடத்தைக் காணுமிடத்துக் கண் ணிற்குங் குடத்திற்கும் உள்ள சம்பந்தம் சையோகம். கண்ணினுல் குட உருவத்தைக் காணும் இடத்துச் சையோகமான குடம் சையுத்தமாய், அக்குடத்துக்கும் குடவுருவத்துக்கும் சமவாய சம்பந்தமாதலால் சையுத்த சமவாயம். கண்ணினுல் குட உருவத்தின் தன்மை யாகிய சாதியைக் காணுமிடத்துக் குடம் சையுத்தமும், அக்குடத்தின் உருவம் சமவாயத்தில் உள்ள சமவேத மும், உருவத்திற்கும் உருவத்தன்மைக்கும் சமவாயமும் ஆதலால் சையுத்த சமவேத சமவாயம். செவிக்கும் சத்தத்துக்கும் உளதாய சம்பந்தம் சமவாயம். ஓசைத் தன்மையைச் செவி உணருங்கால் ஓசை சமவாயத்தி லுள்ள சமவேதமும், ஓசைத் தன்மைக்கும் ஓசைக்குஞ் சமவாயமும் ஆதலால் சமவேத சமவாயம். ஒரு இடத் தில் ஒரு பொருள் இல்லையென்று அறியுமிடத்து இடத்தை முன்னரும் இன்மையைப் பின்னருமாகவும், இன்மையை முன்னரும் இடத்தைப் பின்னருமாகவும் கூறப்படும். உதாரணம், வீட்டில் குடமில்லை குடமில் லது இவ்வீடு என்பனவாம். முன்னே உள்ளது விசே

டணமும் பின்னே உள்ளது விசேடியமுமாம். இரண்டி டத்துங் காணப்படுவது வீடுதான். ஆதலால் வீட்டில் குடமில்லை யென்றவிடத்து வீடு விசேடணமும் குட மின்மை விசேடியமுமாகி விசேடணத்தன்மைச் சம்பந் தமும், குடமில்லது வீடு என்ற விடத்து வீடு விசேடிய மும் குடமின்மை விசேடணமுமாகி விசேடியத்தன் மைச் சம்பந்தமுமாம். இவ்வாறு கூறுவர் நையாயிகர். இச்சம்பந்தம் ஆறும் இந்திரியத்திற்கும் விடயத்திற் கும் உள்ள சம்பந்தமேயன்றிப் பிறிதில்லை. ஆதலால் இச்சம்பந்தங்கள் உயிருக்கும் சிவனுக்கும் உள்ள இரு பொருள்களின் சம்பந்தத்திற்குப் பொருந்தாவாம்.

இனிப் பொருள்களின் சம்பந்தம் ஐக்கியம், தாதான் மியம், சமவாயம், சையோகம், சொரூபமென ஐவகைப் படும். அவற்றுள் ஆற்று நீருங் கடல் நீரும் சேர்ந்தாற் போல்வன ஐக்கியம். குணத்திற்கும் குணிக்கும் உள தாய சம்பந்தம் சமவாயம். விரலும் விரலும் சேர்ந்தாற் போல்வன சையோகம். அக்கினிக்குச் சொரூபம் செம்மை. சூரியனுக்குஞ் சொரூபம் செம்மை ஆதலால் அக்கினியும் சூரியனும் சொரூபத்தால் சம்பந்தமுடை யன என்பதுபோல்வன சொரூபமெனப்படும். இவர் கள், சிவசீவர்களின் சம்பந்தத்தை ஐக்கியம் என்று கூறலாமோ எனின், ஐக்கியத்தில் ஒருபொருளே ஆத லால் ஒன்று ஒன்றே கூறி இருக்கலாம்; அத்துவிதம் என்று உய்த்துணர வைக்கவேண்டாம். அன்றியும் ஒரு பொருளாயின் அநுபவிக்கும் ஆன்மா முத்தி யில் இல்லையென்றாகி முத்தியே இல்லை எனப்படும்; ஆதலால் ஐக்கியமென்றல் பொருந்தாது. தாதான் மியத்தின் வேறாக நையாயிகர் கூறும் சமவாயம் என்பதில்லாமையால், சமவாயமே தாதான்மியமெனப் படும். ஆதலால் குணத்திற்கும் குணிக்குமுள்ள சம வாய சம்பந்தமே அச்சம்பந்தமென்று கூறலாமோ

எனின், முதல்வனைப்போல ஆன்மாவும் குணிப்பொருளேயன்றி ஆன்மா முதல்வனுடைய குணமன்று. ஆதலால் அதுவும் பொருந்தாது. விரலும் விரலுஞ் சேர்ந்தாற்போலுள்ள சையோக சம்பந்தமே அச்சம் பந்தம் என்று கூறலாமோ எனின், கூறுபட்ட பொருள்களுக்கேயன்றி வியாபகப் பொருள்கட்குச் சையோகம் இல்லை. அன்றியும் ஒருபக்கங்கூடியும் மற்றொருபக்கங் கூடாத சையோகம் வியாபகப்பொருட்குக் கூடாது. ஆதலால் அதுவும் பொருந்தாது. ஆன்மாவும் சித்சொரூபம், சிவமும் சித்சொரூபம் ஆதலால் சொரூப சம்பந்தமே அத்துவித சம்பந்தமென்று கூறலாமோ எனின், அது நீயாகின்றாய் என்னும் மகாவாக்கியப் பொருளில் ஆகின்றாய் என்னுங் கலத்தலைச் சொரூப சம்பந்தம் வலியுறுத்தாது; அன்றியும் சொரூபத்தினால் சம்பந்தமிருந்தது கொண்டு சிவானந்தத்தை அநுபவித்தலுங் கூடாது; கலந்து நின்றாலே சிவானந்தத்தை அநுபவித்தல் கூடும்; ஆதலால் அதுவும் பொருந்தாது.

இனிச் சிவன் சீவனென்னும் இருபொருள்களின் சம்பந்தத்தை எந்தச் சம்பந்தமாகக் கூறலாமெனின், ஒருபொருள் குணமென்றுங் குணியென்றும் இருதன்மைப்பட்டு நிற்றலும் இருபொருள் பிரிக்கமுடியாத கலப்பினால் ஒருதன்மைப்பட்டுநிற்றலும் எனத் தாதான்மியம் இருவகைப்படும். உதாரணம் - அக்கினி பொருளால் ஒன்றேயாயினும் அக்கினியென்றும் சூடு என்றும் இருதன்மைப்பட்டு நிற்றலும், கண்ணொளியும் ஆன்மாவின் அறிவும் பொருளால் இரண்டேயாயினும் பிரிக்க முடியாமையால் ஒருதன்மைப்பட்டுநிற்றலுமாம். அவ்விருவகைத் தாதான்மியத்துள் குணகுணியின் சம்பந்தம் தாதான்மியமெனவும் இருபொருள்களின்

சம்பந்தம், அத்துவிதமெனவும் வழங்கப்படும். ஆதலால் முற்றறிவும் முற்றுத்தொழிலும் உடைய சிவமும், சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய ஆன்மாவும், வேறு வேறு அறிவுந் தொழிலுமுடைய பேதப் பொருள்களாய்ப் பிரிக்கமுடியாது கலந்து நிற்றல்பற்றிப் பேதப் பொருள்கள் இரண்டும் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம் அத்துவிதமென அறிக. இதுவே ஆசிரியர் கருத்தென்பது இந்நூல் இரண்டாஞ் சூத்திரம் முதலதிகரணத்து ஏதுவில் "அத்துவிதமென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு" என்றதனலறிக. இக்கருத்தேபற்றிச் சிவப்பிரகாசம் பாயிரம் ஏழாவது செய்யுளில் "அறிவொளி போற் பிரிவரும் அத்துவிதம்" என்ருர் புடைநூலாசிரியரும்.

இனி அத்துவிதமென்னுஞ் சொல்லில் முன்னின்ற அகரம் அன்மை இன்மை மறுதலையென்னும் மூன்று பொருளையும் உணர்த்துமேனும் எண்ணுப் பெயர் மேல் வந்த அகரம் இன்மைப் பொருளையேனும் மறுதலைப் பொருளையேனும் உணர்த்துதல் வழக்கின்கண் இல்லாமையால் அன்மைப் பொருளையே உணர்த்தும். இதனை இந்நூல் இரண்டாஞ்சூத்திரம் முதலதிகரணத்தும் சிவஞான சித்தியார் ஆருஞ்சூத்திரம் ஒன்பதாவது செய்யுளின் விசேட உரையிலும் விரித்துக்கூறியிருக்கின்ரும். ஆதலின் அவ்விடங்களில் காண்க.

அக்கினியானது சூக்குமமாக எங்கும் இருப்பினும் அது தன்தொழிலைச் செய்யவேண்டின் விறகு முதலிய யாதானும் ஒன்றில் தங்கி நின்றல்லது சுடுதல் முதலிய தன் தொழிலை நடத்தாது. அதுபோல, முதல்வனும் எங்கும் வியாபகமாக இருப்பினும் தொழில் செய்யுமிடத்து உயிரினிடமாக நின்றே எத்தொழிலையும்

செய்வனென்று உணர்க. உயிர் ஒன்றனை அறிய வேண்டுமாயின் முதல்வன் உடனின்று அறிந்தா லன்றி அவன் அறிவித்தல் மாத்திரையானே அறிய முடியாது. ஆகவே, முதல்வன் தொழிலுக்கு உயிரும் உயிரின் தொழிலுக்கு முதல்வனும் வேண்டப்பட்டு இருபொருளும் பிரிக்கமுடியாத அத்துவிதமாய் நிற்கு மென்பது பெறப்படும். அறிவித்தல் காட்டும் உப காரம். அறிதல் காணும் உபகாரம். காட்டும் உபகா ரத்தால் இன்னது செய்யலாமென்று தோன்றும். காணும் உபகாரத்தால் அவ்வாறு செய்தல்கூடும். முதல்வனுடைய காணும் உபகாரத்தையின்றி உயிர் ஒன்றனையும் காணமுடியாதென்பதைத் திருமாளிகைத் தேவர் - திருவிசைப்பா - கோயில் பதிகம் 11, 10, 9, 7 ஆவது செய்யுட்களில் "தொண்டனேன் நினையுமா நினையே" "விரும்புமா விரும்பே" "தொடருமா தொடரே" "நுகருமா நுகரே" என்று இவ்வாறு முத்திநிலைபற்றி ஓதிய திருவாக்குக்களாலும் அறிக. இவ்வத்துவித இயல்பு நோக்கியல்லவா காரைக்கால் அம்மையார் அற்புதத் திருவந்தாதி 20 ஆவது செய்யு ளில் "அறிவானும் தானே அறிவிப்பான் தானே" என்று ஓதிப் பின்னர் "அறிவாய் அறிகின்றான்றானே" எனவும் ஓதினர். அச்செய்யுளில் முதலாவது அறி வான் என்று கூறியது உயிருக்கு அறிவித்தற் பொருட்டு அறிவிக்கவேண்டியதைத் தனித்து அறிதல். பின்னர் அறிவாய் அறிகின்றான் என்றது அறிவித்த பொருளில் உயிர் அழுந்தி அனுபவிக்கும்படி செய்தற் பொருட்டு உயிர் அறிவோடு கூடிநின்று அறிதல் எனக் கொள்க. இவ்விரண்டனுள் தானாய் நிற்கும் நிலைபற்றிச் செய்யுங் காட்டும் உபகாரம் முன்னைய தெனவும் உயிரோடு கூடி அதுவாய் நிற்கும் நிலை பற்றிச் செய்யும் காணும் உபகாரம் பின்னையதெனவும் அறிக. அத்துவிதநிலை இனிது விளங்குவதற்காகவே

காணும் உபகாரத்தை முத்திநிலை கூறும் இச்சூத்திரத்தில் வைத்தார். அதாவது பெத்தத்தினும் அத்துவிதமாய் நிற்பினும் விளங்காது முத்தி நிலையில் நன்கு விளங்கும் என்பதாம்.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறு காணும் உபகாரம் உணர்த்துதல் என்று கூருமல் ''காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் காட்டிக் காண்டல்'' என்பதற்குக் காட்டும் உபகாரம் மட்டுந் தான் கருத்தென்று உரைப்பாரும் உளர்; அவ்வாறு கூறுதல் ஆசிரியர் கருத்தன்று. எதனுல் எனின், சூத்திரத்தைப் பதச்சேதம் செய்து முதலதிகரணத்து மேற்கோளில் 'அவனும் அவற்றது விடயத்தை உணரும்' எனக் காணும் உபகாரம் மட்டுமே எடுத்துக் கொண்டு உரைத்திருத்தலினுல் என்க. அவ்வாருயின், சூத்திரத்தில் கண்டு என்றுமட்டும் கூருமல், காட்டிக் காண்டல் எனக்காட்டும் உபகாரத்தையும் சேர்த்துக் கூறியகருத்து என்னையெனின், காட்டும் உபகாரம் முன்னர் நிகழ்ந்து அதன் பின்னர்க்காணும் உபகாரம் நிகழுமென்பதை அறிந்துகொள்ளுதற் பொருட்டுக் காட்டும் உபகாரமும் உடன் கூறப்பட்டதன்றி வேறு அன்று. இவ்வாறு கொள்ளவில்லையாஞல் ஐந்தாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட காட்டும் உபகாரத்தை இவ்விடத்தும் கூறுதல், கூறியது கூறலாய் முடியும். ஆதலால் இச்சூத்திரத்திற்குக் காட்டும் உபகாரம் உணர்த்துதல் கருத்தென்றல் பொருந்தாது; அவ்வாருயினும், வடமொழிச் சிவஞான போதம் பதினொராஞ் சூத்திரத்தில் காட்டும் உபகார மாத்திரையே யன்றிக் காணும் உபகாரம் கூறவில்லையே எனின், அந்நூலில் காட்டுவானும் என்றதில் உள்ள உம்மை காண்பானும் என எதிரது தழுவி நிற்றலால் காணும் உபகாரம் கூறவில்லை என்றல் எவ்வாறு பொருந்தும். அந்த

உம்மைக்குப்பொருள் காணமாட்டாதார்பாடம் வேருக ஓதுவர் என்க.

இச்சூத்திரம் இரண்டதிகரணங்களை உடையது.

## முதல் அதிகரணம்

'ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றது' என்பது மேற்கோள்.

இம்மேற்கோள் கூறும் பொருள் யாதெனின், முதல்வன் உயிருக்குக் காட்டும் உபகாரமே உள்ளது; அன்றி உயிரின் பொருட்டு அறிதலாகிய காணும் உபகாரம் இல்லையென்று வாதிகள்கூற, முதல்வனும் உயிர்களால் உணரப்படும் விடயங்களை அந்த உயிர்களோடு உடனாக நின்று உணருவான் என்று காணும் உபகாரத்தினுல் அத்துவித நிலையை இனிது விளக்குகிறது என்பதாம். விடயமாவது பெத்தத்தில் உலகப் பொருளும் முத்தியில் சிவமுமாம்.

அவனும் என்றதிலுள்ள உம்மை உயிர்கள் உணர்தலேயன்றி முதல்வனும் உணர்வன் என்னும் பொருளைக் குறித்தமையால் இறந்தது தழுவிய உம்மையாகும்.

உணரும் என்றதற்கு உயிர்க்கு அறிவித்தற் பொருட்டு அறிவிக்க வேண்டுவதை அறியும் என்று சிலர் கூறுவர். அவ்வாறு கூறின், அறிவித்தற் பொருட்டு அறிதல் மேல் ஐந்தாம் சூத்திரத்துட் கூறப்பட்டிருத்தலால் முன் சித்தித்ததைப் பின்னரும் சாதிப்பதாகிய சித்தசாதனம் என்னும் குற்றமாம். அன்றியும் அத்துவிதநிலை கூறும் இவ்விடத்திற்கு வேருய்நிற்றல் பற்றி அறிவதாகிய காட்டும் உபகாரத்தைக் கூறுதல்

பொருத்தமும் அன்று; உடனாய்நின்று அறிவதாகிய காணும் உபகாரம் கூறுதலே பொருத்தமாம் என்க.

அத்துவித நிலை இரண்டாம் சூத்திரத்தில் 'அவையே தானேயாய்' எனவும், ஐந்தாம் சூத்திரத்தில் 'தாம்தம் உணர்வின் தமி அருள்' எனவும் கூறப்பட்டிருப்பினும், உயிரோடு கலந்து நிற்றலை அநுபவத்தில்வைத்து விளக்காமையால் அவ்விரு சூத்திரங்களினும் அத்துவித நிலை பொதுவாகக் கூறப்பட்டதாம். அவ்வாறு பொதுவாகக் கூறிய அத்துவிதத்தை இச்சூத்திரத்தில் காணும் உபகாரத்தின் வைத்துச் சிறப்பாக உணர்த்தி இனிது விளக்கியவாறு அறிக.

இங்ஙனம் காட்டுமுபகாரமே உள்ளது என்பவர்களை மறுத்துக் காணுமுபகாரமும் உண்டு என்பதனைக் கூறியபொழுது, மீண்டும் அவர்கள் கண் சடம் ஆதலாலும், கண் காணுதலாலுண்டாகிய பயன் உயிர்க்கே உரியது ஆதலாலும், கண் காணும்பொழுது உயிரும் கண்ணுடன் ஒருங்கியைந்து காணுதல் பொருந்தும். கண்ணைப்போல் உயிர் சடம் அன்று ஆதலாலும், உயிர் உணர்தலால் உண்டாகிய பயன் உயிருக்கே உரியது ஆதலாலும் கண்ணை உவமானமாகக் காட்டி அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றல் பொருந்தாது என்றுகூற, விளக்கினது ஒளி கண்ணினது ஒளியோடு கலந்து கண்ணொளியோடுகூட உருவத்திலும் கலந்தால்தான் கண் அவ்வுருவத்தைக் காணும்; விளக்கினது ஒளி உருவத்தில் கலவாவிடில் கண் உருவத்தைக் காணாது. அதுபோல, அறிவித்தால் அறியும் தன்மையை உடைய உயிர்களும், முதல்வனுடைய உணர்வு தம்மோடு கலந்து நின்று தம்மோடுகூட விடயத்திலும் கலந்து நின்றால் அறிவு விளங்கி அவ்விடயத்தை அறியும். அங்ஙனமன்றி, உயிர்கள் முதல்வனையில்லாமல் தனித்து நிற்கமாட்டா; தனித்து

ஒரு விடயத்தை அறியவுமாட்டா. ஆதலால் அறிவு விளங்குதற்கும் விடயத்தை அறிதற்கும் முதல்வன் உடனின்று அறிதல் வேண்டப்படும் என்றுகூறி மறுத்து "இவ்வான்மாக்கள் அவனையின்றி அமைந்து ஒன்றையும் விடயியா ஆகலான்" என்னும் ஏதுவால் மேற்கோளைச் சாதித்தருளினர் என்க.

உயிர் முதல்வனையின்றித் தனித்து நில்லாமையால் காட்டுமுபகாரம் விளங்குதல்போல, உயிர்கள் அந்த முதல்வனின்றி ஒரு விடயத்தையும் விடயிக்காமையால் காணுமுபகாரம் இனிது விளங்கும் என்பார். 'அவனையின்றி அமைந்து ஒன்றையும் விடயியா ஆகலான்' என்றார்.

'இங்குத் தங்கிப்போம் பாத்திரமும் குலாலன் வினை தவிர்ந்த சக்கரமும் கந்தித்துச் சுழலுமாபோல்' (சித்தி. சூ. 10: 6) என்பதில் பாத்திரம் கந்தித்தல்போலவும் சக்கரம் சுழலுதல்போலவும் எனத் தனித்தனி முடிதல் போல, அமைந்து விடயியா என்பது வேறு வேறு வினையாதலால் அவனையின்றி அமையா, அவனையின்றி விடயியா என்று முடிக்கப்பட்டது.

ஒன்றையும் என்றதிலுள்ள உம்மை எஞ்சாமையை உணர்த்தினமையால் முற்றும்மை.

உயிருக்கு அறிவு விளங்குதலும் பொருளைப் பற்றுதலும் முதல்வனையின்றி நிகழாமை ஏது. இந்த ஏதுவால் முதல்வனிடத்தில் இரண்டு உபகாரங்களும் உண்டு என்பது மேற்கோள். கண்ணொளி விளக்கொளிபோல என்பது உவமை.

விடயியா என்பது விடயம் என்னும் பெயர்ப் பகுதியிலிருந்து பிறந்த எதிர்மறை வினைமுற்று.

இந்த எதிர்மறையை ஏதுவாக வைத்து இரண்டு உபகாரங்களும் முதல்வனிடத்தில் உண்டு என்பதை விரித்து, வழிநூலாசிரியராகிய ஸ்ரீ அருணந்தி சிவாசாரியார், "எவ்விடத்தும் இறையடியை இன்றியமைந் தொன்றை அறிந்தியற்றி யிடாவுயிர்கள் ஈசன்தானும், செவ்விதனில் உளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன், இவ் வுயிர்கள் தோற்றும்போ தவனையின்றித் தோற்ரு இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும். அவ்வுயிர்போல் நின்றிடுவ னுத லாறு மரனடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே" (சித்தியார். சூ. 11: 7) என்று அருளினர். காட்டுமுபகாரம் காணுமுபகாரம் என்னும் இரண்டனையும் விரித்தோதிய இச்செய்யுளில் எவ்விடத்தும் என்றது பெத்தம், முத்தி என்னும் இரண்டினும் என்க. 'இறையடியை யின்றியமைந் தொன்றை அறிந்தியற்றியிடா உயிர்கள்' எனவும், 'ஈசன்தான் எங்குமாய்ச் செறிந்து நிற்பன்' எனவும் இச்செய்யுளில் கூறியது விடயத்தின்கண்படும் நிகழ்ச் சிக்கு (காணுமுபகாரத்திற்கு) எனவும், 'இவ்வுயிர்கள் தோற்றும் போது அவனையின்றித் தோற்ரு' எனவும், 'அவ்வுயிர்போல் நின்றிடுவன்' எனவும் கூறியது உயிரின்கண்படும் நிகழ்ச்சிக்கு (காட்டுமுபகாரத் திற்கு) எனவும் கொள்க. இங்ஙனம் காணுமுபகாரத் திற்கு எனவும் காட்டுமுபகாரத்திற்கு எனவும் கொள்ளாவிடில் இருதரம் கூறுதல், கூறியது கூறல் என்னும் குற்றமாய் முடியுமென்று உணர்க.

உயிருடன் கலந்து நிற்றலால் அறிவு இச்சை செயல்களை விளங்கச் செய்யுங் காட்டும் உபகாரமும் பொருளுடன் கலந்து நிற்றலால் அறிவு இச்சைசெயல் களைப் பொருளுடன் கலக்குமாறு செய்யும் காணும் உப காரமும் முதல்வனிடத்தில் உண்டு என்பதை அறிக.

விளக்கினது ஒளி கண்ணொளி விடயம் (உருவம்) என்னும் இரண்டிடத்திலும் கலத்தல் வேண்டுமென் பதை "விளக் கொளி கலந்தவற்றை" (சிவப்பிர. 58) என்பதனால் விளக்கொளி விடயத்தில் கலத்தலையும், "விளக்கின் சோதி கலந்திடும்" (சிவப்பிர. 58) என்ப தனால் விளக்கினது ஒளி கண்ணொளியோடு கலத்தலை யும் புடைநூலாசிரியர் நன்கு விளக்கியருளினர் என்றுணர்க.

பெத்தத்தில் உயிர்க்கு அறிந்து அனுபவித்தற்கு உரிய விடயம் இருத்தல்போல, பரமுத்தியில் உயிர்க்கு அனுபவித்தற்கு உரிய விடயமில்லை ஆதலால் எவ் விடத்தும் என்று வழிநூலாசிரியர் கூறியது பொருந் தாது என்றுகூற "சுத்தவனுபோகத்தைத் துய்த்தல் அணு" (உண்மை விளக்கம் 51) என்றும், "ஒன்றி நின் றுணரும் உண்மை" (சிவப்பிர. 87) என்றும் வேறிடங்களிலும் இங்ஙனமே அனுபவமுடைய ஆசிரி யர்கள் ஓதுதலால் பரமுத்தியில் உயிர் சிவானந்தத்தை விடயித்தல் உண்டு என்றும், சிவானந்தத்தை விட யித்தல் முதல்வனையின்றி முடியாமையால் முதல்வனும் அந்தப் பரமுத்தியில் அச்சிவானந்தத்தை உயிரினோடு உடனாகநின்று அறிவன் என்றும் பெறப்படுதலால் பொருந்தும் என்று உணர்க.

இங்ஙனம் காட்டும் உபகாரமே உளது என்று கூறும் வாதிகளைமறுத்து, காணும் உபகாரமும் உளது என்று ஏதுவினால் சாதித்தபோது அவர்கள் மீண்டும் முதல்வன் உயிர்களான் உணரப்படும் விடயத்தை அவ் வுயிர்களோடு உடனாக நின்று உணருவானானால் உயிர் கள் விடயங்களை அறிதலுக்கும் முதல்வன் அவ்விடயங் களை அறிதலுக்கும் வேறுபாடு இல்லை என்பது பெறப் படும் என்று கூற, ஐம்பொறிகள் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து விடயங்களையும் அது

வதுவாய் (அவ்வவ் விடயங்களாய்)ச் செறிந்து நின்று உணருந்தன்மையன. அதுபோல உயிர்களும் விடயங்களைச் சார்ந்ததன் வண்ணமாய்ச் செறிந்து நின்று உணரும்தன்மையன. இங்ஙனம் உயிர்கள் ஐந்து விடயங்களையும் அதுவதுவாய்ச் செறிந்துநின்று உணர்தலால் ஐந்து விடயங்களையும் ஒரேகாலத்தில் அறியாது ஒவ்வொன்றாய் அறிந்து அனுபவிப்பனவாகும். இங்ஙனம் சார்ந்ததன் வண்ணமாய்ப் பலதிறப்படுதல் இன்றி ஒரே தன்மையையுடைய சிவமாகிய முதல்வன் எல்லா உயிர்களுடைய எல்லா விடயங்களையும் பொது வகையால் ஒரேகாலத்தில் உணர்ந்து அவ்வுயிர்களோடு உடனாக நின்று சிறப்புவகையால் அறிவன். இங்ஙனம் உயிர்கள் விடயங்களை அறிதற்கும் முதல்வன் விடயங்களை அறிதற்குமுள்ள வேறுபாட்டைக் கூறி, அவர்களை மறுத்து உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினர்.

உதாரணம் வருமாறு:

ஐந்தையும் ஒக்க உணரா தவற்றுணர்வ(து)
ஐந்தும்போல் நின்றுணரு மாகலான் – ஐந்தினையும்
ஒன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே எவ்வுலகும்
ஒன்றொன்றாப் பார்க்கும் உணர்ந்து.

என்பதாம்.

முன்வந்துள்ள சொல்லும் பொருளும் பின்னும் வருதலால் இது சொற்பொருட்பின் வருநிலை என்னும் அணியின்பாற்படும்.

உள்ளமே என்பதிலுள்ள ஏகாரம் சிவத்தைப் பிரித்தலினால் பிரிநிலை ஏகாரமாகும். உள்ளம் - உயிர். ஒன்று என்பது சிவம். இப்பெயர் பலதிறப்படுதலின்றி எல்லா உயிர்களுடைய எல்லா விடயங்களையும் அறி

தற்கு ஏதுவாகிய ஒரு பெற்றித்தாகிய தன்மையைக் குறிப்பாக உணர்த்தி நிற்றலினால் குறிப்பேதுவாய் நின்ற பெயராகும்.

இங்ஙனம் உயிர்கள் விடயங்களை அறிதலுக்கும் முதல்வன் உயிர்களுடைய விடயங்களை அவ்வுயிர்களோடு உடனாக நின்று அறிதலுக்கும் உரிய வேறுபாடுகளை விளக்கி உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்திய பொழுது, உயிர்கள் விடயங்களை விடயித்தல் போல முதல்வனை விடயிக்கும் பொழுது முதல்வன் உயிர்களின் விடயங்களை அவ்வுயிர்களோடு உடனாக நின்று விடயித்தாற்போலத் தன்னையும் தான் விடயிப்பன் என்பது பெறப்படும். இங்ஙனம் தன்னைத்தான் விடயிப்பனால் விடயம் வேறு விடயிப்பவன் வேறாக இல்லாமல் விடயமும் விடயிப்பவனும் ஒன்றாக முடிதலால், ஆன்மாச் சிரயம் (தன்னைப் பற்றுதல்) என்னும் குற்றமுண்டாகும். ஆதலால், முதல்வனும் உயிர்களது விடயங்களை உணருவான் என்பது எல்லாவிடத்தும் பொருந்தாது என்று கூற, உயிர்கள் முதல்வனைச் சார்ந்த விடத்து முதல்வன் மயமாய் (சிவமாய்) ஒரு தன்மையுற்று ஒற்றுமைப்பட்டு நின்று அம்முதல்வனுடைய திருவடிகளை உணரும்பொழுது அவ்வுயிர்களுக்குப் பரபோகமாய் (சிவபோகமாய்) மேன்மேலும் விளைவான் ஆதலாலும், முதல்வன் உயிர்கள் உணரும்பொழுது உயிர்களினது அறிவின்கண் ஏகமாய் (ஒன்றாய்) அவ்வறிவை விட்டு நீங்காதிருப்பன் ஆதலாலும், அறிகின்றவர் அறிகின்ற பொருளாகிய தன்னை அங்ஙனம் அறிகின்றவர்களது அறிவோடுகூடி அறிவான் என்றுகூறி முதல்வன் உயிர்களது விடயங்களை அறிவான் என்பது எவ்விடத்திலும் செல்லும் என்பது பொருந்தும் என்று விளக்கி உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினர் என்க.

உதாரணம் வருமாறு :

ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன் - ஏகமாய்
உள்ளத்தின் கண்ணானன் உள்குவார் உள்கிற்றை
உள்ளத்தான் காணுனே உற்று.

என்பதாம்.

போகமாய்த் தான் விளைந்தபொற்பினன் என்பதிலுள்ள போகமாய் விளைதல் என்னும் அடைமொழி போகமாய்த் தான் விளைதலால் என்னும் ஏதுவாயும், ஏகமாய் உள்ளத்தின்கண் ஆனன் என்பதிலுள்ள உள்ளத்தின்கண் ஏகமாதல் என்னும் அடைமொழி உள்ளத்தின்கண் ஏகமாய் நீங்காது நிற்றலால் என்று ஏதுவாயும் நின்று, முதல்வன் உயிர்களது விடயத்தை உணருவான் என்பது எவ்விடத்திலும் பொருந்தும் என்பதை வலியுறுத்தி நின்றன.

இதில் உள்ளத்தான் என்பதிலுள்ள ஆன் என்னும் மூன்றும் வேற்றுமையுருபு உள்ளத்தோடு எனும் உடனிகழ்ச்சிப் பொருளைத் தந்துநின்றது.

உயிர்கள் முதல்வனை விடயிக்கும்பொழுது உயிர்களின் விடயமாகிய முதல்வனும் உயிர்களோடு உடனாக நின்று தன்னலு முணரப்படுவன். உள்குவார் உள்கிய பொருளாகலின் ஐம்பொறிகள்போல என்று அனுமானப் பிரமாணம் காட்டுவார் 'உள்குவார் உள்கிற்றை உள்ளத்தா னுற்றுக் காணுனே' என்று கூறியருளினர். உள்குவார் உள்கிற்றுதல் விடயித்தற்கட்படும் இயல்புக்கும் அறிவு விளங்குதற்கட்படும் இயல்புக்கும் பொருந்தும் என்று விளக்குவார் 'ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப் போகமாய்த்தான் விளைந்த பொற்பினன்' என்று விடயித்தற்கட்படும்

இயல்பினையும் 'ஏகமாய் உள்ளத்தின்கண் ஆனான்' என்று அறிவு விளங்குதற்கட்படும் இயல்பினையும் எடுத்துக் கூறியருளினர்.

சிறுபோகம் (சிற்றின்பம்) பரபோகத்திற்கு ஒப்புமையாகக் கூறப்படுதலால் பரபோகமாய் என்று சிறப்பித்துக்கூறாது போகமாய் என்று பொதுவாகக்கூறியருளினர். திருவடிகளை உணருந்தொறும் போகம் மேன்மேலும் விளைதலை 'புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய், மணந்தாழ் புரிகுழலாளல்குல் போல வளர்கின்றதே' என்னும் திருச்சிற்றம்பலக் கோவையாரால் உணர்க.

மிதித்துச் செல்லுதற்குரிய வன்னிலத்தினைவிட்டுச் சேற்று நிலத்தினை மிதித்துச் சென்றவனுக்கு அந்தச் சேற்றுநிலம் செயற்கையாதல்போல, சிறுபோகத்தை அனுபவித்த உயிர்களுக்குப் பரபோகம் செயற்கையாதலால் ஆக்கமும் காரணமும் அடுத்து வந்தது. ஆக்கம் ஆய் என்பது; காரணம் ஏகமாய் நின்றே இணையடிக ளொன்றுணர்தல் என்பது.

போகமாய்த் தான் விளையும் பொற்பினான் என்று எதிர்காலத்தாற்கூறாது, விளைதல் தெளிவாதல் (நிச்சயமாதல்) பற்றி, போகமாய்த் தான்விளைந்த என்று இறந்த காலத்தால் கூறியருளினர்.

கண் கண்ணாடியினின்றும் தன்னை விடயித்தாற் போல முதல்வன் உயிர்களோடு நின்று தன்னை விடயித்தல் பொருத்தமுடையது ஆதலால் ஆன்மாச்சிரயம் என்னும் குற்றம் இத்தன்மைகளையுடைய பொருள்களுக்கு உண்டாகாது என்றுணர்க. கண்ணாடிக்குள்ளாகத் தோன்றுவதுபோலுள்ள எதிர் விம்பமாவது விம்பமே அல்லாமல் வேறன்று என்பது சிவாகமங்களின் துணிபாகும்.

இவ்வதிகரணத்துள் அவனும் அவற்றது விடயத்தை உணரும் என முதல்வனுடைய அறிவு ஒன்றே பற்றிக் கூறினரேனும் சிவஞானசித்தியாம் 1-ஆம் சூத்திரம் 62 ஆவது செய்யுளில் "எத்திறம் ஞானமுள்ளது அத்திறம் இச்சை செய்தி" என வழிநூலாசிரியர் கூறியவாறு இச்சை செய்திகட்கும் அது ஒக்கும். ஒக்கவே, பெத்தமுத்தி இரண்டினும் ஆன்மா அறியும் பொருளை முதல்வன் உடன் நின்று அறிவன் எனவும் இச்சிக்கும்பொருளை உடன்நின்று இச்சிப்பான் எனவும் செய்யுஞ்செயலை உடன்நின்று செய்வன் எனவும் அறிக.

அவ்வாருயின் நன்மை தருதற்கு ஏதுவாக ஆன்மாவின் அறிவு இச்சை செயல்கள் நிகழுங்காலத்து முதல்வனுடைய அறிவு இச்சை செயல்களும் உடன் நிகழ்தல் பொருந்தும்: தீமை தருதற்கு ஏதுவாக ஆன்மாவின் அறிவிச்சை செயல்கள் நிகழுங்காலத்து அதில் செல்லவொட்டாது தடுக்காமல் அதற்கும் உதவி புரிதல் முதல்வன் கருணைக்கும் ஆற்றலுக்கும் குறையாகாதா எனின்,

அறிவு இச்சை செயல்கள் மூன்றும் ஆன்மாவின் குணம். குணமாவது இயற்கையாய்ப் பொருள் உள்ள பொழுதே உள்ளதாகும். ஆன்மாவின் குணமாகிய அம்மூன்றும் ஆன்மா உள்ளபொழுதே உள்ளனவாயினும் யாதானுமொரு துணையைக்கொண்டே நிகழுந் தன்மையும் அப்பொழுதே உள்ளது. அது எதுபோல எனின், கண்ணினிடத்து இயல்பாயுள்ள ஒளி சூரியன் முதலியவற்றின் ஒளியினுடைய துணையைக்கொண்டு விளங்குமாறு போலாம். இனி உயிரினிடத்துள்ள அம்மூன்றும் நிகழ்வதற்கு வேண்டப்படுந்துணையும் புறத்துணை அகத்துணையென இருவகைப்படும்.

அவற்றுள், புறத்துணையாவது தூல சூக்கும உடம்பு முதலாயின. அகத்துணையாவது முதல்வனுடைய அறிவிச்சை செயல்கள். புறத்துணையாகிய தனுகரணாதிகள் சடமாதலால் தானே உயிரைவந்து கூடமாட்டா. உயிர் அறிவுடைப் பொருளாயினும் அவ்வறிவுக்குத் தானே விளங்குந்தன்மை இல்லாமையால் உயிர் தானும் தனுகரணாதிகளை எடுத்துக்கொள்ள மாட்டாது. ஆதலால் இறைவன்தான் உயிருக்குத் தனுகரணாதிகளைத் தரல்வேண்டும். அந்த இறைவனும் தன் விருப்பப்படி தருவன் எனின் எல்லா உயிர்களுக்கும் ஒரேதன்மையான தனுகரணாதிகளைத் தரல் வேண்டும். அவ்வாறின்றி உயிர்தோறும் வேறு வேறு தனுகரணாதிகள் காணப்படுகின்றமையால் அவ்வாறு தருதற்குக் காரணம் இருத்தல்வேண்டும். அக்காரணம் உயிர்களினிடத்துக் குணமாகவுள்ள இச்சையின் வியாபார பேதமாகிய விருப்பு வெறுப்பேயாம். அவ்விருப்பு வெறுப்பும் அகத்துத் தன்னைப்பற்றி நிகழ்தலும் புறத்துத் தனுகரணாதிகளைப்பற்றி நிகழ்தலும் என இருவகைப்படும்.

அகத்து நிகழ்தல் மூலகன்மம் எனவும் புறத்து நிகழ்தல் இருவினையாகிய ஆகாமியம் எனவும் கூறப்படும். சிவஞானசித்தியாரில், "கன்மமூலங்காட்டி" என்றதும் அகத்து நிகழும் விருப்பு வெறுப்பையேயாம். அவ்விருப்பு வெறுப்பாவது துன்பத்திற்காற்றாது இன்பத்தை விரும்புதலேயன்றித் துன்ப இன்பங்களைப் பகுத்தறிந்து வெறுத்தலும் விரும்புதலுஞ் செய்தலில்லை. இந்நிலையில் தனுகரணாதிகள் கிடையா. இந்நிலைதான் துன்பத்தைச்செய்யும் ஆணவ மலத்துடன் கூடிய கேவலமெனப்படும். இக்கேவலநிலையில் மலத்தின் சேட்டைக்கு ஆற்றாது உயிர் வருந்தும்

பொழுதும் இறைவன் உடன் நிற்கின்றான். நின்றும் மலத்தை நீக்கித் திருவடியை அப்பொழுதே கொடுக்க வில்லை. அவ்வாறு கொடுக்காமைக்குக் காரணம் மலத்தை நீக்கினும் உயிரினிடத்துள்ள பற்று அறாது. பற்று அறாதவிடத்து நீக்கியமலத்தை மீளப் பற்றக் கூடும் என்பதேயாம்.

இனி, அப்பற்று முற்றும் நீங்கவேண்டுமாயின் இறைவனை இடைவிடாது பற்றல்வேண்டும். அவ்வாறு இறைவனைப்பற்றுந்தன்மை கேவலத்தில் உயிருக்கு இல்லாமையால் அவ்விடத்தில் மலத்தை இறைவன் நீக்கவில்லை. இறைவனைப் பற்றுந்தன்மையையும் அப்பொழுதே உயிருக்கு அவ்விறைவன் கொடுக்கக் கூடாதோ எனின், இயல்பாகவே மலத்தைப்பற்றாதிருக் கச் செய்யக்கூடாதோ என்று வினவில் என்னவிடை தரக்கூடுமோ அதே விடையை இதற்குங்கொள்க.

ஆகவே மலத்தைப்பற்றுதல் இயற்கையாயின வாறு போல இறைவனைப் பற்றுதலும் மலப்பற்று அற்றபொழுது உண்டாதல் இயற்கையென அறிக. மலப்பற்று அறுதற்கு இறைவன் தனுகரணாதிகளைத் தந்தது மன்றி அத்தனுகரணாதிகளைக்கொண்டு செய்ய வேண்டுவன இவை செய்யவேண்டாதன இவையென அறிந்து கொள்ளுதற்பொருட்டு வேதாகமங்களையுந் தந்தருளினன். இவ்வாறு தனுகரணாதிகளையும் வேதா கமங்களையும் புறத்துணையாக இறைவன் தந்து அவற் றைப் பொருந்தி அறிவிச்சை செயல்கள் தொழிற்படு தற்கு அவற்றுடன் பிரிப்பின்றி அகத்துணையாகவும் இருக்கின்றான். துணையை உபயோகப்படுத்துந் தகுதி உயிருக்குச் சொந்தமாதலின் தீயநெறியில் உபயோகப் படுத்தின் அது உயிரின் குற்றமேயன்றி இறைவன் கருணையின் குற்றமாகாது என அறிக.

எதுபோலவெனின், பிதா கத்தி, எழுத்தாணி செய்வித்துப் பிள்ளையிடம் கத்தியால் சட்டத்தை வார்ந்துகொள். எழுத்தாணியால் எழுது என்று சொல்லி அதனை அவனிடம் கொடுத்தபோது அவன் அவ்விரண்டுஞ் செய்யாது, கழுத்தில் குத்திக்கொண்டால் அக்குற்றம் பிதாவைச்சாராது அப்பிள்ளையைச் சார்தல்போலாம். உயிரின் குற்றமாகவின்றன் தீய நெறிக்குத் தண்டத்தைத்தந்து தண்டத்துக்காற்றாது வருந்துங்கால் நன்னெறி காட்டித் திருவடியைத் தருகின்றான். இவ்வாறு செய்தலால் இறைவன் ஆற்றலுக்குக் குறைவில்லாமையும் அறிக.

செய்யவேண்டியதைச் செய்து முடிப்பதுதான் ஆற்றலாகுமன்றிச் செய்யவேண்டாததைச் செய்து முடிப்பது ஆற்றலாகமாட்டாது. துணையை உபயோகப்படுத்தும் தகுதி உயிருக்கு சுதந்திரம் என்னும் இக் கருத்துப்பற்றியே திருக்குறள் கடவுள் வாழ்த்தில் "தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்றலரிது'' என்று அருளினார் ஆசிரியர் வள்ளுவரும். சேர்ந்தார் என உயிரின் தன்வினையாகக் கூறியது இங்கே கவனிக்கத்தக்கது.

உயிருக்குத் துணையின்றி அறியும் தன்மையில்லை. ஆயினும் துணையை உபயோகப்படுத்தும் சுதந்திரம் உண்டென்பது துணையைக்கொண்டு காணுந்தன்மை கண்ணுக்குச் சுதந்திரமாயிருத்தல்போலாம். இக்கருத்துப் பற்றியே திருவாசகம் உயிருண்ணிப்பத்து 10-வது செய்யுளில் 'நான் பாவிய னானுலுன நல்காயெனலாமே' எனவும், திருமந்திரத்தில் 'நெறியைப் படைத்தா னெருஞ்சில் படைத்தா, னெறியில் வழுவி னெருஞ்சின் முட்பாயு, நெறியில் வழுவா தியங்க வல்லார்க்கு, நெறியி னெருஞ்சின்முட் பாயகி லாவே' எனவும் ஆசிரியர்கள் அருளிச் செய்வா ராயினர்.

இன்னும் இதனை ஒரு அரசன் ஆணையைப் பெற்று அதிகாரத்தை நடாத்தும் ஒருவன் சட்டத்திற்கு வழுவாது செய்யின் நன்மை பெறுதலினும் வழுவின் தண்டம் பெறுதலினும் வைத்தும் அறிந்து கொள்க.

இவ்வாறு பெத்தமுத்தி இரண்டினும் உயிருடன் இறைவன் கலந்து நின்று உயிரின் அறிவிச்சை செயல்கள் தொழிற்படுவதற்கு தன்னுடைய அறிவிச்சை செயல்களைத் தொழிற்படுத்துவன் என்றது பொருந்தும். அவ்வாறாயின் பெத்தத்தில் வினைப் பயன்களை உயிர் அநுபவிக்கவும் முத்தியில் 'முற்செய் வினையுந் தருவரன்முன்' என மேற்பத்தாஞ் சூத்திரம் இரண்டாவது அதிகரணத்து முதல் வெண்பாவில் கூறியபடி வினைப்பயன்களை இறைவன் ஏன்று கொள்வான் என்றல் எவ்வாறு பொருந்துமெனின், பெத்தத்தில் இறைவன் உயிராக நின்று அறிகின்றான். முத்தியில் உயிர் இறைவனாக நின்று அறிகின்றது. ஆதலால் இறைவன் உயிராக நின்ற பெத்தத்தில் வினைப்பயன்கள் உயிருக்காயின. உயிர் இறைவனாக நின்ற முத்தியில் முதல்வனை அநுபவிக்கும் சிவாநுபவம் நீங்கிய வினைப்பயன்கள் இறைவனுக்காயின என அறிக.

இறைவனே தானாய் நின்றால் தான் செய்யும்வினை தன்னைக் கட்டுப்படுத்தாது என்னும் இம்முறைமை நோக்கி அல்லவா உலகத்துள் ஒன்றனை ஈவாரும் ஏற்பாரும் சிவார்ப்பணம் எனக் கருதாமல் தான் கொடுத்ததாகவும் தனக்குத் தந்ததாகவும் கருதிய விடத்துக் குற்றம் உண்டாகுமென ஆகமங்கள் ஓதிய தூஉம் என்க.

இன்னும் சிவஞானசித்தியார் 2 ஆம் சூத்திரம் 25-வது செய்யுளில் "யாதொரு தெய்வங் கொண்டீர்

அத்தெய்வ மாகி யாங்கே, மாதொரு பாகனார்தாம் வருவர்'' என்ற உண்மையை அறிந்தவிடத்து எல்லாம் சிவமாகவே தோன்றுமாதலால் அவ்வாறு சிவாநுபவம் வரப்பெற்றவருக்கு வினைப்பயன் தாக்குதலின்றி எல்லாம் சிவானந்தமாகவே விளங்கும் என்னும் கருத்துப்பற்றி இந்நூல் 10 ஆவது சூத்திரம் இரண்டாவது அதிகரணத்தில் "எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை, முற்செய்வினை யுந்தருவான் முன்'' எனவும், திருவுந்தியார் 33 ஆவது செய்யுளில் "பெற்றசிற் றின்பமே பேரின்பமாய்'' எனவும், திருக்களிற்றுப்படியார் 26 ஆவது செய்யுளில் "உடம்புடைய யோகிகள்தாம் உற்றசிற் றின்பம், அடங்கத்தம் பேரின்பத் தாக்கி'' எனவும், திருவாசகம் பண்டாய நான்மறைப் பதிகம் 6 ஆவது செய்யுளில், "காணும் கரணங்க ளெல்லாம் பேரின்பமெனப், பேணுமடியார்'' எனவும், "எல்லாஞ் சிவமா யிருந்ததே'' எனவும் அநுபவமுடைய தேசிகர்கள் அருளினரென அறிக.

## இரண்டாம் அதிகரணம்

'இனிப் பத்தியினன் மறவாது ஏத்த அவனது சீபாதத்தை அணையும் என்றது' என்பது மேற்கோள்.

இம்மேற்கோள் கூறும் பொருள் யாதெனின், ஏகமாகி நின்றவர்களுக்கு அங்ஙனம் ஏகமாகி நிற்றல் பற்றி அறிவு இச்சை செயல்கள் என்னும் மூன்றும் அவ்விடத்தில் விடயித்தல் எங்ஙனம் என்று வினவ, அறிவிக்க அறியும் இயல்பினையுடையது உயிர். அந்த உயிர் விடயங்களை அறியும்படி முதல்வன் அவ்வுயிரோடு ஒருங்கு இயைந்து நின்று அறிவித்து அறிந்து நிற்பன். இங்ஙனம் முதல்வன் உடனாக இயைந்து நின்று அறிவித்து அறிந்து வருதலாகிய அத்துவித நிலையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பி

ஞல் முதல்வனது அருளின் வழிநின்ருல் அவனது திருவடியாகிய சிவானந்தானுபூதியை அடையும் என்று கூறி, நிட்டையினியல்பு கூறுகின்றது என்பதாம்.

வழிநூலாசிரியராகிய ஸ்ரீ அருணந்திசிவாசாரியர் "இத்தை ஆயும் அறிவுடையனுய் அன்புசெய்ய" (சித்தி. சூ. 11: 1) என்று அறிவின்செயலை முன்னர்க் கூறியருளினர். ஆதலால் இச்சூத்திரத்தில் 'அயரா அன்பின் அரன்கழல் செலுமே' என்று அறிவின் செயலை முன்னர்க் கூறியபடி, இவ்விடத்திலும் 'மறவாது பத்தியினுல் ஏத்த' என்று மாற்றியுரைக்கப் பட்டது.

ஏத்த என்னும் சொல்லுக்கு அருளின்வழி நிற்க என்று பொருள் கொண்டுள்ளார். இங்ஙனம் பொருள் கொள்ளுதலை உபசாரவழக்கு என்பர்.

அன்பு, பத்தி, காதல் என்பன இச்சை வளர்தல் என்னும் பொருளை உடையன. ஆதலால் அவ்விச்சை பரமுத்தியிலும் உண்டு என்று உணராதவர், பத்தியாவது சீவன் முத்தி நிலைக்குச் செய்யப்படும் 'சாதனம் என மயங்கித் தமக்கு வேண்டியவாறு உரைப்பர். பரமுத்தியில் இச்சை உண்டாகாவிட்டால் சிவபோகம் அனுபவமாகாது ஆதலாலும் சீவன் முத்திநிலைக்கே உரியதொன்ருனல் 'செம்மலர் நோன்தாள்' என்னும் சூத்திரத்தோடு சேர்த்து ஓதுதல்வேண்டும். அங்ஙனமன்றி 'அயரா அன்பின்' என்று வேருெரு சூத்திரம் செய்யவேண்டாம் ஆதலாலும் அவர்கள் கூறுவது பொருந்தாது என்று உணர்க.

இங்ஙனம் ஏகமாகி நின்றவர்கள் அத்துவித நிலையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பினுல் முதல்வன் அருள்வழி நின்ருல் அம்முதல்வன்

திருவடியாகிய சிவானந்தானுபூதியை அடைவர்என்று அவர்களுடைய அறிவிச்சை செயல்கள் விடயிக்கு முறையைக் கூறியபொழுது, மீண்டும் அவர்கள் அந்த அத்துவித நிலையை மறவாது பத்தியினால் முதல்வனது அருள்வழி நின்றாலும் அம்முதல்வனது திருவடியாகிய சிவானந்தானுபூதியை அடைதல் பரமுத்தியிலன்றி முடியாது என்றுகூற, முதல்வன் வேறாக நில்லாமல் உடனாக இயைந்துநின்று, செய்கின்றவர்கள் செய்யும் வினைகளை அறிந்து, அந்த வினைகளுக்குத் தக்க பயன்கள் அப்பொழுதே கொடுக்கத் தக்கனவானால் அப்பொழுதே கொடுப்பன்; அங்ஙனமல்லாவிடில் கொடுக்கத்தக்கதான வேறுகாலத்தில் கொடுப்பன். ஆதலால் திருவடியாகிய சிவானந்தானுபூதியை அணைதல் சீவன் முத்தி நிலையிலும் கைகூடும் என்றுகூறி, 'அவன் அன்னிய மின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான்' என்னும் ஏதுவால் மேற்கோளைச் சாதித்தருளினார் என்று உணர்க.

இங்ஙனம் திருவடியை அணைதலாகிய சிவானந்தானுபூதி சீவன் முத்திநிலையிலும் கைகூடும் என்று கூறியபோது, மீண்டும்அவர்கள் முதல்வன் திருவடியை அணைதலாகிய சிவானந்தானுபூதி உடம்பு நீங்கிய பரமுத்தியிலன்றி உடம்பினையுடைய சீவன் முத்தியிலும் கைகூடுமாயின், அங்ஙனம் கூடுதல் சூரியனது ஒளி எல்லார்க்குந் தெரிதல்போலத் திருவடியைக் கூடுதலாகிய சிவானந்தானுபூதி பக்கத்திலே உள்ள பிறருக்கும் தெரிதல்வேண்டும் என்று கூற, சூரியன் எல்லார்க்கும் ஒரேதன்மையாக நின்றாலும் ஒளியுடைய கண்ணுக்குத் தெரிந்து ஒளியில்லாத கண்ணுக்குத் தெரியாது இருளாய் நிற்பன். அதுபோல, முதல்வன் எவ்விடத்திலும் ஒரேதன்மையாக நின்றாலும் மலம் நீங்கிய முத்தர்களுக்கு விளங்கியும், மலத்தையுடைய

பெத்தர்களுக்கு விளங்காமலும் இருப்பன். சீவன் முத்தரும் உடலினையுடையவர்கள் ஆதலால் உடலினையுடைய மற்றவர்களைப் போலப் பாசத்தினை உடையவர்கள் ஆவார்கள். ஆதலால் சீவன் முத்தர்களுக்கும் மற்றவர்களுக்கும் வேற்றுமையில்லை எனின்; மலரும் பக்குவமுடைய தாமரை மற்றைத் தாமரைகளைப்போல நின்றாலும் மலரும் பக்குவமுடைய தாமரையினது கூம்புதலை நீக்கி மலரச்செய்கின்ற சூரியன்போல மலம் நீங்காத பெத்தர்கள் உடம்போடு நின்றாலும் பக்குவமுடையவர்களாய்ப் பத்தியினால் தன்னை மறவாமல் உணர்கின்றமையால் அவர்கட்கு முதல்வன் தன்னுடைய திருவருட் பார்வையால் பாசத்தைநீக்கிப் பூரண அறிவை விரியச்செய்வான். ஆதலால் உடம்போடு நின்றாலும் சீவன்முத்தர்கள் பாசம் உடையவர்கள் அல்லர் என்று உதாரணத்தால் விளக்கி அவர்களை மறுத்து ஏதுவை வலியுறுத்தருளினர் என்க.

உதாரணம் வருமாறு :

அருக்கன்நேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்(கு)
இருட்கண்ணே பாசத்தார்க் கீசன் - அருட்கண்ணால்
பாசத்தை நீக்கும் பகலலர்த்தும் தாமரைபோல்
நேசத்தில் தன்னுணர்ந்தார் நேர்.

என்பதாம்.

ஆதலால் உடம்போடு கூடிநின்றாலும் சீவன் முத்தர்கள் பாசமுடையவர்கள் அல்லரென்பது வருவித்து உரைக்கப்பட்டது. இங்ஙனம் வருவித்து உரைத்தலைக் குறிப்பெச்சம் என்பர். திணிந்த இருளென்று விளக்கும்பொருட்டு ஆசிரியர் 'அல்லிருள்' என்றார்.

மலத்திற்குக் கண்ணாவது அறியாமை. காணார் என்பதற்குக் காட்சியில்லாதவர்களுடைய கண்ணுக்கு.

என்றும், பகல் என்பதற்குச் சூரியன் என்றும் பொருள் கொண்டுள்ளார். இங்ஙனம் பொருள் கொள்ளுதலை ஆகுபெயர் என்பர்.

தன்னையுணர்ந்தார் என்று விரிந்து வரவேண்டிய இரண்டாம் வேற்றுமையுருபு விகாரத்தால் மறைந்து வந்தது. உணர்ந்தார் நேர் என்பதிலுள்ள நேர் என்பது ஏழாம் வேற்றுமையினது பொருளின்கண் வருவதாகும். அது உருபு மயக்கமாய் நான்காம் வேற்றுமையை உணர்த்திற்று. அருக்கன்; எடுத்துக்காட்டுவமை.

நீக்குதல் என்னும் உவமேயவினை உவமானத்திலும், அலர்த்தல் என்னும் உவமானவினை உவமேயத்திலும் கூட்டப்பட்டன. நீக்குதலுக்கும் அலர்த்தலுக்கும் உரிய செயப்படுபொருள்கள் வருவித்துரைக்கப்பட்டன. எங்ஙனமெனின், சூரியன் நீக்குதலுக்குக் கூம்புதலும் முதல்வன் அலர்த்தலுக்கு அறிவும் என்பதாம்.

இங்ஙனம் உடல் நீங்கிய பிறகல்லது முதல்வன் திருவடியாகிய சிவானந்தானுபூதியைப் பெறுதல் இயலாது என்பவர்களை மறுத்து உடம்பினையுடையபொழுதும் பெறுதல் இயலும் என்றும், அங்ஙனம் திருவடியாகிய சிவானந்தானுபூதியைப் பெற்றவர்கள் உடம்புடையவர்களாதல்பற்றிப் பாசமுடைய பெத்தர்களாக மாட்டார்கள் என்றும், பாசம்நீங்கிய முத்தர்களாவார்கள் என்றும், திருவடியாகிய சிவானந்தானுபூதியைப் பெறுதல் மருங்குள்ளார்க்குத் தெரியாமைக்குக் காரணம் இஃது என்றும் சாதித்தபொழுது, பாசத்தை நீக்கி அறிவை விரியச்செய்தல் உடம்புநீங்கிய பரமுத்தியில் நிகழக்கூடியதாகும். அங்ஙனமன்றி உடம்போடுநிற்கும் சீவன்முத்தியில் நிகழக்கூடியதன்று என்று மீண்டும் அவர்கள் கூற; உயிர்களோடு அநாதியே அத்துவித

மாய் நிலைபெற்றிருக்கும் முதல்வன் உயிர்களைத் தன் மயமாக அதாவது சிவமயமாகச் செய்துகொள்ளுதற்கண் மிகுந்த இச்சையுடையவனுதலால், முதல்வன் கண்ணின்கண் நிலைபெற்றுள்ள இருளைப் பிறைச் சந்திரன் உடனாய்நின்று நாள்தோறும் சிறிது சிறிதாக நீக்குதல்போல, அவ்வுயிர்களிடத்துள்ள மலசத்தியைப் பருவந்தோறும் சிறிது சிறிதாகப் படிமுறையால் நீக்கி இங்ஙனம் அறவே பாசத்தை நீக்குவன்.

காந்தக்கல் தனது முன்னிலையிலுள்ள இரும்பை இழுத்துத் தன்வசமாக்கிக் கொள்ளுதல்போலப் பாசம் படிமுறையால் சிறிது சிறிதாக நீங்குந்தோறும் முதல்வனும் தனது சத்தியைப் படிமுறையால் அவ்வுயிர்களிடத்துப் பதியச்செய்து உயிர்களைத் தன்னிடத்து இழுத்துத் தன் வசமாகச்செய்து அங்ஙனம் செய்தற்கண் சலிப்பில்லாமல் நிற்பன். காந்தம்போல முதல்வன் சந்நிதி மாத்திரையால் செய்தலால் விகாரி ஆகான் என்று பாசத்தைநீக்கி அறிவை விரியச்செய்யும்முறை இஃது என்று உணர்த்தி அவர்களை மறுத்து உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினுர் என்று உணர்க.

உதாரணம் வருமாறு :

மன்னும் இருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னும் அரனே மலந்துரந்து - தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் தான்.

என்பதாம்.

மதி என்பதற்கு வளர்பக்கத்துப் பிறைமதி என்று பொருள் கொண்டுள்ளார். “அந்த அருளுனக்கிங்கு ஆதாரமாயல்லின், இந்து என எறித்திட்டு” அதாவது

'இருளைப் பிறைமதி நாடோறும் சிறிது சிறிதாக நீக்குதல்போல, முதல்வன் திருவருள் உனக்கு ஆதாரமாய் நின்று மலசத்தியைப் பருவந்தோறும் சிறிது சிறிதாகப் படிமுறையால் நீக்கி' எனவரும் துகளறுபோதமும் (செய் - 36) இக்கருத்துடையது என்று உணர்க.

அரனே என்பதிலுள்ள ஏகாரம் மலத்தை நீக்குதல் உயிரினால் செய்யத்தக்க செயலன்று என்பதை உணர்த்துதலின் பிரிநிலை ஏகாரம். பிரிக்கப்பட்டது உயிரின் செயல் என்று உணர்க. வான், பான், பாக்கு என்பன தொழிற்பெயர் விகுதியாயும் வருமாதலால் செய்வான் என்பதற்குச் செய்தல் என்று இங்கே பொருள்கொண்டுள்ளார்.

'செய்வான் செய்தல்' என்பதன்கண் செய்வான் போலச் செய்தல் என்று உவமவுருபை விரித்து உரை கூறியுள்ளார். செய்தல்போலச் செய்தல் என்பது பொருளாகும். செய்தல் என்பதற்குச் செய்தற்கண் என்று ஏழாம் வேற்றுமையுருபை விரித்து உரை கூறியுள்ளார்.

மதி இருளைத் துரந்தவாறு முதல்வன் மலத்தைத் துரந்து என்பதனால், மலம் நீங்குவது பின்னே (பரமுத்தியில்) என்பவர்களது கொள்கை மறுக்கப்பட்டது.

முதல்வன் சோபான முறையில் நீக்குதலால் சத்திநிபாதம் சிவபுண்ணியம் முதலாயின நால்வேறு வகைப்பட்டன. இந்த நால்வகையினுள்ளும் ஒவ்வொன்றும் நான்காய்ப் பதினறுவகைப்பட்டன. இவற்றுள்ளும் ஒவ்வொன்றும் பலவேறு வகைப்பட்டு விரியுமென்க.

சத்திநிபாதம் நால்வகைப்படுதலாவது: மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்பதாகும். இவற்றுள் ஒவ்வொன்றும் நால்வகைப்படுதலாவது: மந்த

தரத்தில் மந்ததரம், மந்ததரத்தில் மந்தம், மந்ததரத்தில் தீவிரம், மந்ததரத்தில் தீவிரதரம் என்பதுபோலக் கொள்ளுதல்.

சிவபுண்ணியம் நால்வகைப்படுதலாவது: சரியை, கிரியை, யோகம், இம்மூன்றுனும் உண்டாகும் ஞானம் என்பதாம். இவற்றுள் ஒவ்வொன்றும் நால்வகைப் படுதலாவது: சரியையில் சரியை, சரியையில் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என்பதாம். இவற்றுள் ஒவ்வொன்றும் பலவாய் விரிதலை ஆகமங்களுள் கண்டுணர்க.

இவற்றின் விரிவுகளைச் சிவஞான மாபாடியத்தின் எட்டாஞ்சூத்திரத்தில் விளக்கப்பட்டுள்ளமை காண்க.

இங்ஙனம் உடம்போடுகூடிய சீவன்முத்தி நிலையிலும் பாசத்தை நீக்கி அறிவை விரியச்செய்வன் என்பதனை, பாசத்தைநீக்கி அறிவையலர்த்து முறைமையால் சாதித்தபொழுதுஉயிருக்குக்குணம்பொல அநாதியாக உள்ளது ஆணவமலம். அது உயிரின் வேறாய் நீக்கத்தக்கது அன்று, ஆதலால் 'மலந்துரந்து' என்று மேலே வெண்பாவில் கூறியது பொருந்தாது என்று பாடாணவாத சைவர்கள் கூற, முதல்வனது திருவடியை அடையும்பொழுது அந்தத் திருவடியை உயிர் கெட்டு ஒன்றுமோ (சேருமோ) கெடாது ஒன்றுமோ என்று வினுவினுல்; உயிர் கெட்டு ஒன்றும் என்று கூறின்; உயிர் கெட்டமையால் ஒன்றுது, உயிர் கெடாது ஒன்றும் என்றுல் உயிர் கெடாதபொழுது இரண்டு பொருளாய் நிற்றலினுல் ஒன்றுது. இங்ஙனம் உயிர்கெட்டு ஒன்றும் என்றுலும் பொருந்தவில்லை, உயிர்கெடாது ஒன்றும் என்றுலும் பொருந்தவில்லை. பின் விடையாது எனின், உப்பு தன்னுடைய கட்டித் தன்மை நீங்கி நீரில் ஒன்றுதல்போல, உயிர் தனது

ஆணவமலம் கெட்டு ஒழிய முதல்வனது திருவடியை ஒன்றி, அத்திருவடிக்குச் சேடமாம். இங்ஙனம் சேடமாகிய உயிருக்கு அத்திருவடியை விட்டு மீளுதல் இல்லையென்று கூறி உதாரணத்தால் அவர்களை மறுத்து ஏதுவை வலியுறுத்தருளினர் என்றுணர்க.

உதாரணம் வருமாறு:

நசித்தொன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்று
நசித்திலதேல் ஒன்றுவ தில்லை - நசித்துமலம்
அப்பணைந்த உப்பின் உளமணைந்து சேடமாம்
கப்பின்றும் ஈசன் கழல்.

என்பதாம்.

ஒன்றுது என்னும் வினைமுற்றினது து என்னும் விகுதி செய்யுள் விகாரத்தால் மறைந்து நின்றது. நசித்து மலம் என்பதிலுள்ள நசித்து என்பது நசிக்க என்பதனுடைய திரிபாகும். ஆதலால் உரையாசிரியர் நசித்து என்பதற்கு நசிக்க என்று பொருள் கொண்டு உள்ளார்.

எந்தப் பொருள் எந்தப் பொருளின் நிமித்தமாய்த் தனக்கென்று சுதந்திரமில்லாமல் நிற்கின்றதோ அப்பொருள் அந்தப் பொருளுக்குச் சேடம் எனப்படும்.

ஆதலால் முதல்வனது திருவருளாலல்லது ஒன்றையும் செய்யானாய், தன்னைவிட்டு மீளாது இயைந்து நிற்கும் அம் முதல்வனது திருவடியையே அறிந்து இச்சித்து அநுபவித்தலாகிய முதல்வனுடைய வழிபாட்டிற்கு உரிமையெய்திய உயிர் முதல்வனுக்குச் சேடம் என்று உணர்க.

'அவையுடைமை ஆளா நாம் அங்கு' (சூ. 2. அதி. 4.) என்று ஓதுதலால் அதாவது முதல்வனுடைய திருவடியை இங்ஙனம் அடையப்பெறாத மற்ற

உயிர்களும் பாசங்களும் முதல்வனுக்குப் பொதுவகையால் சேடமாம். இங்ஙனம் திருவடியை அடைந்த உயிர்கள் சிறப்பு வகையால் சேடமாம். ஆதலால் 'சேடமாம்' என்று இவ்விடத்தில் வேருகச் சிறந்தெடுத்துக் கூறியருளினுர் என்றுணர்க.

முத்திநிலை கூறி முடிந்ததால் இறுதியில் 'கப்பின்ரும்' என்று விட்டுநீங்காதிருத்தலைக் கூறியருளினர். விட்டு நீங்காமையை அவினுவிருத்தி என்பர். இங்ஙனம் அநாதியாக உள்ள மலம் நீங்க உயிர் முதல்வன் திருவடியை அடைந்து நிற்கும். ஆதலால் மேலை வெண்பாவின் 'மலந்துரந்து' என்பது பொருத்தமுடைத்து என்று பாடாணவாதிகளை மறுத்தபொழுது, கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூன்று அவத்தைகளிலும் உயிர் தனதுஇயல்பிற்கு (சிறப்பிற்கு)க் கெடுதி இல்லாமல் நிற்குமென்பது எங்ஙனம் என்று மீண்டும் அவர்கள் வினுவ, சூரியன் காலைப்பொழுதில் முகிற்படலத்தில் மறைந்து அம்முகிற்படலம் சிறிது நீங்கிய பொழுது தனது ஒளி ஏகதேசமாய் விளங்கிநின்று, பின் அம்முகிற்படலம் பெருங்காற்ருல் முழுவதும்விட்டு நீங்கிய பொழுது எவ்விடத்திலும் தன்னெளியாய்த் தோன்றுந் தன்மைபோல, உயிர் அநாதியே தன்னுடைய அறிவு மலத்திஞல் மறைக்கப்பட்டுக் கேவலப்பட்டுநின்று பிறகு ஐம்பொறி முதலாகிய கருவிகளோடு கூடி நின்று ஏகதேசமாய் அறிவு விளங்கி ஐம்புலன்களை விடயிக்கும்; பிறகு அம்மலத்தை முதல்வனது திருவருளால் பற்றற நீக்கி வியாபகமாய் அறிவு விளங்கி அம்முதல்வனது திருவடியை அடைந்து சுத்தப்படும் என்று உதாரணத்தால் உயிர் மூன்று அவத்தைகளிலும் தன்னியல்பு கெடாமையை விளக்கி, உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினர் என்று உணர்க.

உதாரணம் வருமாறு :

பொன்வாள்முன் கொண்மூவில் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே எங்குமாம் தன்மைபோல் - முன்வாள்
மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை உண்ணும்
மலத்திரித்துச் செல்லும் வரத்து.

என்பதாம்.

மேகபடலத்தினுள் மறைந்தபொழுதும் கெடாது நிற்றல் பற்றித் தன்மை என்றுகூறியருளினர். தன்மையாவது சிறப்பியல்பாம்; சிறப்பியல்பு ஒருகாலத்தும் கெடாது என்றுணர்க.

முன்வந்துள்ள வாள் என்பதற்கு ஒளி யெனப் பொருள் கொள்ளாமல் சூரியன் எனப் பொருள் கொண்டுள்ளார். இங்ஙனம் பொருள் கொள்ளுதலை ஆகுபெயர் என்பர்.

மலத்தை என்று சாரியையும் உருபும் வருதலே விதியாகும். அங்ஙனமாகவும் சாரியை உள்ளபோது உருபு வராதிருத்தலுக்கு விதி இலேசு எனக் கொள்க.

மற்று என்னும் இடைச்சொல் வினைமாற்றுப் பொருளின்கண் வந்துளது; ஆதலால் மற்று ஒடுங்கி உலகை உண்ணும் என்றவிடத்தில் அறிவு மறைபட்டுக் கேவலமாதலை நீக்கி ஏகதேசம் ஆதலை உணர்த்தி நின்றது.

இந்த மற்று என்னும் இடைச்சொல்லை மற்று மலத்து இரித்து என்பதனேடும் கூட்டி உரை கூறியுள்ளார். அதனுல் ஏகதேசமாதலை நீக்கி வியாபகமாதலை உணர்த்திநின்றது. உவமானத்தின் வினைகளான ஒடுங்குதலையும் எங்குமாதலையும் உவமேயத்தினும் கூட்டி உரை கூறியுள்ளார்.

உயிரின் அறிவு மறைந்தும் ஒடுங்கியும் மறைப்பு நீங்கி எங்குமாய் (வியாபகமாய்) விளங்குதலுக்கே ஞாயிறு உவமையாகும் என்று விளங்கும் பொருட்டு உயிரின் அறிவு ஏகதேசமாயபொழுது 'உலகை யுண்ணும்' (ஐம்புலன்களை விடயிக்கும்) எனவும், வியாபகமானபொழுது 'வரத்துச் செல்லும்' (சுத்தப்பட்டுத் திருவடியை) அடையுமெனவும் உவமையினுல் பெறப் படாத வேறு தன்மைகளையும் உடன் கூறியருளினர்.

மலம் நசித்தலாவது மலத்தினது மறைத்தற் சத்தி மடங்கிக் கீழ்ப்படுதலாம் என்றுணர்க. இக்கருத்து மறைத்த முகிற் படலத்தின் மறைப்பு நீங்கியபொழுது என்னும் உவமையினுல் பெறப்பட்டது.

இச்சூத்திரத்தினுலும் அதிகரணங்களினுலும் கூறி முடித்த தொகைப்பொருள்: பாசநீக்கமும் சிவப் பேறும் என்னும் பயன் இரண்டனுள் மேல் பத்தாம் சூத்திரத்தில் பாசநீக்கம் கூறிப் பாசம் நீங்கப்பெற்ற தனுல் ஆன்மாவானது தன்னேடு முதல்வன் அத்து விதமாய் நின்று, காட்டியுங் கண்டும் வரும் உபகா ரத்தை இடைவிடாத அன்பால் நினைந்து அவன் திரு வடியாகிய சிவானந்தத்தை யடைதலே சிவப்பேறு என இப்பதினெராஞ் சூத்திரத்தாற் கூறப்பட்டது. படவே, முதல்வன் உயிர்களுக்கு அறிவித்தலாகிய காட்டும் உபகாரம் மட்டுமே செய்வன் அன்றி அறித லாகிய காணும் உபகாரமும் செய்வான் என்றல் பொருந்தாதென்று ஒரு சாரார் கூற, முதலதிகரணத் தால் அவரை மறுத்து அத்துவித நிலையை இனிது விளக்கிக் காணும் உபகாரத்தையும் செய்வன் என்ப தும், முத்தியிலும் காணும் உபகாரத்தைச் செய்தலி னுல் தன்னைப்பற்றுதலென்னும் குற்றமில்லையென்பதும் கூறப்பட்டன. படவே, பாசம் நீங்கி ஏகனய் நிற்கும்

போது மறவாமையும் அன்புசெய்தலும் திருவடி அடைதலும் எவ்வாறு கூடுமென்று ஒருசாரார் கூற, இரண்டாம் அதிகரணத்தால் அவரை மறுத்து அம் மூன்றும் உடைமையே ஏகனாய் நிற்கும் நிட்டை என் பதும், அந்நிட்டையாகிய திருவடி அடைதல் அயரா அன்பால் அப்பொழுதே கூடுமென்பதும், பாசம் நீங்கித் திருவடி அடைதல் உடம்பு உள்ளபொழுதே கூடும் என்பதும், பாசம் அறுதியாயினும் நீங்கும் என்பதும், பாசம் நீங்குதலினாலும் திருவடியை அடை தலினாலும் சார்ந்ததன் வண்ணமாகும் ஆன்மாவின் சிறப்புத்தன்மைக்குக் கேடில்லை என்பதும் கூறப் பட்டன.

# பன்னிரண்டாம் சூத்திரம்

## உண்மை அதிகாரம் – பயனியல்

செம்மலர் நோன்தாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.

பதினொராஞ் சூத்திரத்தால் சிவப்பேறு கூறி, அப் பேறுபெற்ற ஞானிகள் உடம்போடு கூடியிருக்கும் அளவும் எவ்வாறு இருப்பர் என்பதை, இப்பன்னி ரண்டாஞ் சூத்திரத்தாற்கூறி, மேல் ஆசங்கை இன்மை யின் நூலை முடிக்கின்றார்.

இச்சூத்திரத்தின் கருத்து யாதெனின் அசிந்தித னாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று என்பதாம்.

இக்கருத்துரையின் பொருள் யாதெனின், பதி னொராஞ் சூத்திரத்திற் கூறியவாறு இடைவிடாத அன் பினால் அரன் திருவடியடைந்து நிட்டைகூடிய முத்தர்க் குப் பிராரத்த அனுபவத்தின் பொருட்டு நிட்டை கலைந்து பிரபஞ்சத்தை நோக்கநேரும். நேருங்கால் சீவன் முத்திநிலை எனப்படும். அச்சீவன் முத்திநிலை யில், திருவடி அடைந்திருக்கும் நிட்டையில் தொழிற் பட்ட அறிவிச்சை செயல்களாகிய மூன்றும் ஒவ்வொரு சமயத்தில் புறத்திற்செல்லும்; செல்லுங்கால் அவ்வறி விச்சை செயல்கள் இன்ன இன்ன இடத்திற்செல்லும் என்பதை உணர்த்தி, அவ்வாறு உணர்த்தும் முறை மையில் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாது அன்பிற்கு

எட்டுவதாய் மேலைச் சூத்திரத்திற் கூறியவாறு அவ் வன்பினால் மறவாது வழிபடற்குரியவனாய் நின்ற முதல் வனை வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டும்படி சிவாலயத்தினிடத்தும், சிவனடியாரிடத்தும், திருவேடத்தினிடத்தும் தெளிவாய்க் கண்டு வழிபடும் முறையினை உணர்த்துதல் என்பதாம்.

முற்சூத்திரத்தில் முத்தி நிலையின் இயல்பினைக்கூறி, இச்சூத்திரத்தில் சீவன்முத்தி நிலைக்கட்படும் விசேடத்தைக் கூறுதலால் முற்சூத்திரமும் இச்சூத்திரமும் இயைபுடையனவாகும்.

இச்சூத்திரத்தின் பொருள் யாதெனின், முதல்வனது அத்துவிதநிலையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பினால் அம்முதல்வனுடைய திருவடியை அடைந்த சீவன்முத்தன், செந்தாமரை மலர்போல விரிந்து விளங்கிய முதல்வனது திருவடியை அடைய ஒட்டாமல் மறத்தலைச் செய்விக்கும் தன்மையையுடைய மூன்று மலமாகிய அழுக்கை ஞானமாகிய நீரால் கழுவித் தன்னைப்போல முதல்வனுடைய அத்துவித நிலையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பினால் அம்முதல்வனுடைய திருவடியை அடைந்த மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி அங்ஙனம் கூடினமையால் மலத்தினாலுண்டாகிய மயக்கம் நீங்குதலால் அன்புமிக்குடைய அம்மெய்ஞ்ஞானிகளது திருவேடத்தையும் சிவாலயத்தையும் முதல்வன் என்றே கண்டு வழிபட்டு வாழ்வான் என்பாதம்.

இச்சூத்திரத்தில் தொழும் என்னும் வினைக்கு எழுவாய் இல்லாமையால் முற்சூத்திரத்தினின்றும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. அங்ஙனம் வருவித்துரைக்கப்பட்ட எழுவாய் சீவன்முத்தன் என்பதாகும். இச்சூத்திரத்தின் பொருளுக்கு ஏற்ப, சீவன்முத்தன்

என்று வருவித்தலை இலக்கண நூலார் ஏற்புழிக் கோடல் என்னும் உத்தி என்பர்.

நோன்தாள் என்பது பொறுக்கும் தாள் என்று பொருள்படும். நோன்றல் - பொறுத்தல் (சுமத்தல்). இது வினைத்தொகை. இங்ஙனமே 'எடுத்துச் சுமப்பானை' (65) என்று திருவருட்பயனில் ஆசிரியர் உமாபதி சிவாசாரியர் கூறியருளினர்.

மலமாகிய அழுக்கை ஞானமாகிய நீரால் கழுவி என்று கூறாமல் மலங்கழுவி என்று இப்பொருள் புலன் ஆகும்படிக் கூறியமையால் குறிப்புருவகம் எனப்படும்.

'மாலறநேய மலிந்தவர்' என்பது அம்மலங்கழீஇ அன்பரொடு மரீஇயினார் என்னும் பொருளைத்தந்து அந்த அன்பரென்று சுட்டி நிற்றலால் சுட்டுப்பெயராம் என்க.

நேயம் மலிந்தவரென்று அதாவது மிக்க நேயம் உடையவரென்று கூறினமையால் வழிபாடுமுடையவர் என்று வழிபாடும் பெறப்பட்டது.

அம்மலங்கழீஇ என்றமையால் அதாவது மலமாகிய அழுக்கை ஞானமாகிய நீரால்கழுவி என்றமையால் அறிவு செல்லும் இடமும், அன்பரொடு மரீஇ என்றமையால் இச்சை செல்லும் இடமும், தொழும் என்றமையால் செயல்செல்லும் இடமும் பெறப்பட்டன. இதனால் சீவன் முத்தர்களுக்குப் பிறவிடயங்களில் அறிவு இச்சை செயல்கள் செல்லா என்பதும் பெறப்பட்டது. அறிவு இச்சை செயல்களாகிய மூன்றும் பிரிந்து நில்லாமல் ஒருமித்து அன்பர்களாகிய ஓரிடத்திலே நிகழ்வதால் அறிவு இச்சை செயல்களுக்குத் தனித்தனி வேறு விடயங்கள் இல்லாமல் ஒரே விடயமாயினமையால் விடயவேறுபாடும் இல்லை என்று உணர்க.

தொழுக என்று விதிவாக்கியமாய்க் கூருமல் தொழும் என்று இயல்பாயுள்ள இலக்கண வாக்கிய மாய்க் கூறினமையின், இச்சூத்திரம் திருவடியடைந்த சீவன்முத்தரது தன்மையைக் கூறிற்று என்பதாம். ஆதலினுற்ருன் கருத்துரைக்குப் பொருள் கூறுங்கால் சீவன்முத்தி நிலையில் எனக் கூறப்பட்டது. சீவன் முத் தர்தன்மை கூறும் சூத்திரமாதலின் இதனைச் சாதன இயலில் வையாது பயனியலாகிய இவ்விடத்தில் வைத்தார் என அறிக.

இனித்தொழும் என்றதனை இரட்டுற மொழிந்து கொண்டு தொழுவன் என்று முன்கூறிய பொருளே யன்றி தொழுக என முன்னிலை ஏவலாக்கியும் உரைத் துக்கொள்க. தொழும் என்பது தொழுவன் என்னும் பொருள்படப் படர்க்கை வாக்கியமாய்க் கூறுங்கால் செய்யும் என்னும் முற்ருயும், தொழுக என முன்னிலை ஏவல் வாக்கியமாய்க் கூறுங்கால் உம் விகுதிப்பொருள் படவும் கொள்க.

தொழும் என்ற இச்சொல்லை இவ்வாறு இலக்கண வாக்கியமாகவும் விதிவாக்கியமாகவும்கொள்வானேன் எனின், பசுவின் பாலானது செல்வப்பெருக்கம் உடையார்க்கு உணவாயும் உடம்பு நோயின்றி வளரச் செய்யும் மருந்தாயும் இருத்தல் போலச் சீவன் முத்தரிடத்து நிகழும் இவ்வழிபாடு சிவானந்த அனுப வத்தை மேன்மேல் வளரச்செய்யும் அநுபவமாயும், மலவாசனையாகிய நோயைத் தீர்க்கும் சாதனமாகிய மருந்தாயும் இருத்தலால், அநுபவ வளர்ச்சி பற்றி இலக்கணமாகவும், மலநோய்தீர்த்தல் பற்றி விதியாக வும் கொள்ளல் வேண்டும் என அறிக. இக்கருத்துப் பற்றியே நூலாசிரியர் கருத்துரையில் வழிபடுமாறு என இலக்கணமாகவும் மேற்கோளில் மலங்களைக் களைக, சிவபத்தர்களோடு இணங்குக, திருவேடத்தை

யும் சிவாலயத்தையும் வழிபடுக என விதியாகவும் கூறிப்புறனடை அதிகாரத்தால் அவ்விதியை வலியுறுத்தினர்.

இதனுள் 'செம்மலர் நோன்தாள் சேரலொட்டா அம்மலங்கழீஇ' என்றது ஓரதிகரணம்; 'அன்பரொடு மரீஇ' என்றது ஓரதிகரணம்; 'மாலறநேய மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே' என்றது ஓரதிகரணம்; ஆக இச்சூத்திரம் மூன்று அதிகரணங்களை உடையது.

## முதல் அதிகரணம்

'ஈண்டு ஆணவ மாயை கான்மியம் என்னும் மலங்களைக் களைக என்றது' என்பது மேற்கோள்.

இம்மேற்கோள் கூறும் பொருள் யாதெனின், ஆணவம் மாயை கான்மியம் என்னும் மூன்று மலங்களையும் நீக்குக என்று, சீவன் முத்தர்கள் இனிச்செய்ய வேண்டியதைக் கூறுகின்றது என்பதாம்.

கன்ம மலமானது தன்னுடைய மூலத்தை (காரணத்தை) நோக்கிக் கான்மியம் என்று பெயர் பெறும். மூலம் விருப்பு வெறுப்புக்களாகும். காமியம் என்று பாடங்கொண்டு ஆகாமியம் என்பது காமியம் என்று நின்றது எனக்கொள்வர். இங்ஙனம் முதலெழுத்துக் குறைந்து நிற்றலைத் தலைக்குறை என்று இலக்கண நூலார் கூறுவர்.

இங்ஙனம் சீவன் முத்தர் இனிச்செய்யவேண்டுவது இது என்று கூறியபொழுது 'மலமாயை தன்னொடு வல்வினை இன்றே' என்று பாசம் நீங்குதல் மேலே பெறப்பட்டது ஆதலால், உண்மை ஞானத்தைப் பெற்று நிட்டை கூடியபிறகு அம்மலங்களால் செய்யக்

கூடியது ஒன்றும் இல்லை, ஆதலால் அந்த மலங்களை மீளவும்களைதல் எதற்கு என்று வினுவ; அம்மலங்கள் மூன்றும் உண்மைஞானத்தைப் பெற்று நிட்டைகூடின வர்களிடத்திலும் ஏதாவதொரு வழியாக நுழைந்து உண்மை ஞானத்தைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்குக் காரணமான முன்னுள்ள விபரீத உணர்வை மேற் படச்செய்யும்; ஆதலால் அவர்களுக்கு அவ்விபரீத உணர்வு ஆகாது. ஆதலால் மூன்று மலங்களையும் களையவேண்டும் என்று சூத்திரத்தில் உடம்பொடு புணர்த்தி ஓதியபொருளை உணர்த்தி 'அவைதாம் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தை உணர்த் தும் ஆகலான்' என்னும் ஏதுவால் மேற்கோளைச் சாதித்தருளினர்.

உணர்த்துதல் - உணர்விற்குக் காரணமாதல். அஞ்ஞானம் என்பதற்கு விபரீதவுணர்வு என்று பொருள் கொண்டுள்ளார். சூத்திரத்தில் உடம்பொடு புணர்த்திய பொருளாவது, அம்மலங்கழீஇ என்பதே கூறவேண்டியதாகும். அம்மலத்திற்கு அடைமொழி யாகச் சேர்த்து ஓதியது 'செம்மலர் நோன்தாள் சேர லொட்டா' என்பதாகும். இந்த அடைமொழியே உடம் பொடு புணர்த்திய பொருளாகும். இந்த அடைமொழி யின் பொருளையே ஏதுவில் விரித்தோதி அருளினர்.

இங்ஙனம் மூன்று மலங்களும் உண்மை ஞானத் தைப்பெற்று நிட்டை கூடினவர்களிடத்தில் ஏதாவது ஒரு வழியால் புகுந்து உண்மை ஞானத்தைக் கீழ்ப் படுத்திப் பிறவிக்குக் காரணமான விபரீதவுணர்வை மேலிடச்செய்தலால் அந்த விபரீத உணர்வு சீவன் முத்தர்களுக்கு ஆகாது. ஆதலால் அந்த மூன்று மலங் களையும் நீக்கவேண்டுமென்று சாதித்தபொழுது, அம் மூன்று மலங்களும் விபரீத உணர்வுக்குக் காரணமாய் வந்து நுழையும்தன்மையும் அம்மலங்களாலுண்டாகிய

விபரீத உணர்வு அந்தச் சீவன்முத்தர்கட்கு ஆகாது என்பதும் எங்ஙனம் என்று வினவ, புண்ணிய பாவங்களினுடைய பயனாகியும் புண்ணிய பாவங்களுக்குக் காரணமாயுமுள்ள இந்தக் கன்மமலமும், பிருதிவிமுதல் மாயாதத்துவம் ஈருகவுள்ள இந்த மாயாமலமும், இது குடம் இது ஆடை என்று சுட்டி அறிவதாகிய விபரீத உணர்வை உண்டாக்கும் இந்த ஆணவ மலமுமாகிய இந்த மூன்று மலங்களும் உண்மை ஞானத்தையுடைய சீவன்முத்தர்களுக்கு ஆகா. ஆதலால் சீவன்முத்தர்கள் அவைகளை நீக்குக என்று உணர்த்தி உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினர்.

உதாரணம் வருமாறு :

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமும்
மண்முதல் மாயைகாண் மாயையும் - கண்ணிய
அஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமும் இம்மூன்றும்
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

என்பதாம்.

பத்தாம் சூத்திரத்திற் கூறியவாறு எல்லா மலங்களும் பற்றற நீக்கிப் பதினொராஞ் சூத்திரத்திற் கூறியவாறு இறைவன் அத்துவிதமாய் நின்று உபகரித்து வரும் உண்மையுணர்ந்து அவ்விறைவன் திருவடி அடைதலாகிய நிட்டைகூடின முத்தர்க்கு ஆகாமிய சஞ்சித வினைகள் கெட்டொழியுமே அன்றிப் பிராரத்தவினை கெடுவது இல்லை. ஆதலால் பிராரத்த வினை உள்ள அளவும் உடம்பும் அந்த உடம்பு உள்ள அளவும் பிராரத்த வினையும் நிற்கும். அப்பிராரத்த வினையானது மெய்யுணர்ந்து நிட்டை கூடிய முத்தரைப் பற்றுவதில்லையாயினும் அம்முத்தருக்கு ஒவ்வொரு சமயத்தில் உடம்போடு கூடியிருக்கும் பழக்கவாசனையால் வந்துதாக்கும். மலம் நீங்கியும்

வாசனையால் பிராரத்தவினை தாக்குதல் எதுபோல வெனின், பெருங்காயம் வைத்துள்ள பாண்டத்தில் பெருங்காயம் இல்லாதபோதும் வாசனை தங்கியிருந்து அப்பாண்டத்தைத் தாக்குதல்போலாம்; அவ்வாறு பிராரத்தவினை தாக்கும்போது அவ்வினைப்பயனை அனுபவிக்குங்கால் சிவஞானசித்தியார் (2ம். சூத். 11-வது) செய்யுளில் கூறியவாறு "பிற்செயா தநுபவிப்ப தின்று" ஆதலால் செயல்வழியாகவே அனுபவம் நிகழும். அச்செயலும் விருப்பு வெறுப்புக்களின் வழியாக நிகழும். ஆகவே அனுபவங் காரணமாக உண்டாஞ் செயலின்வழியாக விருப்புவெறுப்புக்கள் உண்டாகவே பரமே பார்த்திருக்கும் அம்முத்தருக்குப் பிரபஞ்சப் பொருள்கள் அறியப்படும். படவே, அப்பிரபஞ்சப் பொருள்களைச் சுட்டியறிவதாகிய விபரீதவுணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாம். இவ்வாறு விருப்பு வெறுப்புக்களைச் செய்யுங் கன்மமலமும், பிரபஞ்சப் பொருளைத் தோற்றச் செய்யும் மாயா மலமும், விபரீத உணர்வு மேம்படச் செய்யும் ஆணவ மலமும் ஆகிய மூன்றும் திருவடியைக் கூடிய அறிவு பிராரத்தவினை காரணமாக அத்திருவடியை மறக்குஞ் சமயம் பார்த்துவந்து கூடும். முன்னர்க் கன்ம மலமும் அக்கன்மமலங் காரணமாக மாயாமலமும் அம்மாயாமலங் காரணமாக ஆணவ மலமும் வந்துகூடும் என்பதை அறிவிக்க வேண்டிச் செய்யுளில் மேற்கோளில் கூறியவாறு ஆணவம் மாயை கன்மம் என்று கூருமல் கன்மம் மாயை ஆணவம் என்று இம்முறையில் வைத்துக்கூறினர். அவ்வாறு கூறுங்காலத்தும் கன்மத்தின் காரியமாகிய விருப்பு வெறுப்புக்களையும் மாயையின் காரியமாகிய பிரபஞ்சத்தையும் ஆணவத்தின் காரியமாகிய விபரீத உணர்வையும் எடுத்துக்கூறி இக்காரியங்களுடைய கன்மம் மாயை ஆணவம் எனச் சுட்டிக் கூறினர்.

'இக்கான்மியமும்' என்பதிலுள்ள இகரச்சுட்டு மாயை என்பதனோடும் இயைந்து நின்றது. ஆதலால் இம்மாயையும் என்று பொருள் கொண்டுள்ளார்.

புண்ணியபாவம் என்பது அவைகளின் பயனாகிய இன்பத் துன்பங்களையும், அவைகளின் காரணமாகிய விருப்பு வெறுப்புக்களையும் உணர்த்துதலால் உபசாரம் எனப்படும்.

'மண்முதல் மாயைகாண் மாயை' என்னுந் தொடரில் முன்வந்துள்ள மாயை என்பது முப்பத் தோராவது தத்துவமாகிய தன்னையும் உணர்த்தி, தன்னை இறுதியாக உடைய மற்றைய தத்துவங்களையும் உணர்த்தி நின்றது. இங்ஙனம் மாயை என்பது தன்னை இறுதியாக உடைய மற்றைய தத்துவங்களை உணர்த்துதலை இலக்கண நூலார் விடாதவாகுபெயர் என்பர்.

காண்மாயை என்பது வினைத்தொகை. இவ்வினைத் தொகை மாயை என்னும் செயப்படுபொருளோடு முடிந்தது.

இம்மலங்கள் இங்ஙனம் சிவபோகமாகிய பெரு வாழ்வை இழக்கச்செய்தல் சீவன் முத்தர்களுக்கு ஆகாவாயின.

அக்கினியானது ஒரு இடத்தின் ஏகதேசத்தைப் பற்றினும் அப்பொழுதே அதனைக் கெடுக்காதவிடத்து அது இடம் முற்றுங் கெடுக்குமாறுபோல மேன்மேல் முறுகி வளருந் தன்மையினையுடைய இம்மும்மலங் களைத் தோன்றும் பொழுதே துடைக்கவில்லையாயின் சிவஞானத்தை முற்றுங்கெடுக்கும். அன்றியும் தோன் றும் பொழுதே துடைக்காமல் முறுகி வளர்ந்த

பின்னர்த் துடைக்க எண்ணில் அம்மலங்கள் துடைக்கும் தன்மைக் கெடுக்கும். எதுபோல எனின், முள் மரத்தை இளம்பருவத்திற்களையாமல் முதிர்ந்த பருவத்திற்களையத் தொடங்கின் களைவார் கையினை அம்முள் மரங்களைவது போலாம். இவ்வுவமையினையே திருக்குறள் பகைத்திறம்தெரிதல் 9 ஆவது செய்யுளில் 'இளைதாக முண்மரங் கொல்க களையுநர் - கைகொல்லுங் காழ்த்தவிடத்து' என்றார் வள்ளுவரும். இவ்வாறு முறுகினால் துடைக்கமுடியாது என்பது பற்றியே களைக என்று மேற்கோளில் கூறியதை விடு என இவ் உதாரணத்தில் மீண்டுங் கூறி வலியுறுத்தப்பட்டது.

விடுதலாவது அம் மும்மலங்களுள் மேற் கூறியவாறு பிராரத்தங் காரணமாகக் கன்மமும் கன்மங் காரணமாக மாயையும் மாயைகாரணமாக ஆணவமும் வந்துகூடித் தொழிற்பட்டவிடத்து, ஆணவமலத்தானாகிய விபரீத உணர்வை நோக்கி, இவ்விபரீத அஞ்ஞானம் மாயாகாரியம் என்னும் பிரபஞ்ச உணர்வாகிய ஏகதேசக் காட்சியால் உண்டாயிற்று எனவும், அந்த ஏகதேசக் காட்சி விருப்பு வெறுப்புக்களின் தோற்றத்தினால் உண்டாயிற்று எனவும், அந்தவிருப்பு வெறுப்புக்களின் தோற்றமும் பிராரத்தவினை அனுபவித்தற் பொருட்டுச் சென்ற தற்போதத்தால் உண்டாயிற்று எனவும் அறிந்து, பிராரத்த அனுபவத்தை நோக்கிச் செல்வதாகிய தற்போதம் முளையாதவாறு கெடுத்து, நான் என எழுகின்ற அத்தற்போதமின்றித் தான் சிவஞானத்துள் அடங்கிச் சிவஞானசித்தியார் 8-ம் சூத்திரம் 34 ஆவது செய்யுளிற் கூறியவாறு சிவானுபவம் சுவானுபூதியாம்படி ஞானநிலையில் உறைத்து நிற்றலே யாம்.

விபரீதவுணர்வை உண்டாக்குதல் மாயை கன்மங்களுக்கு இயற்கையன்று. ஆணவத்தைச் சேர்ந்த

தனுல் உண்டாகிய செயற்கை என்று உணர்த்துதற் பொருட்டு ஏதுவில் மலங்கள் மூன்றுக்கும் பொது வாகக் கூறப்பட்ட விபரீத உணர்வை உதாரணத்தில் சிறப்பாக ஆணவ மலத்திற்கே கூறியருளினர் என்று உணர்க.

## இரண்டாம் அதிகரணம்

'இனிச் சிவபத்தர்களோடு இணங்குக என்றது' என்பது மேற்கோள்.

இம்மேற்கோள் கூறும் பொருள் யாதெனின், ஆணவம் மாயை கான்மியம் என்னும் மூன்று மலங் களையும் நீக்கிச் சிவஞானத்தினுள் அடங்கி நின்று சிவானுபவம் சுவானுபூதிகமாம்படி ஞானநிலையிலே உறைத்து நிற்கும் சீவன்முத்தர்களுக்கு அங்ஙனம் அந்த ஞானநிலையில் உறைத்து நிற்றல் நிலைபெறுதற் பொருட்டு முதல்வனுடைய உபகாரத்தை மறவாது கடைப்பிடித்துப் பத்தியினுல் ஏத்தி முதல்வனது திரு வடியை அடைந்த சீவன்முத்தர்களோடு நட்புச்செய்க என்று சீவன்முத்தர்கள் மூன்று மலங்களையும் நீக்கிய பின் செய்யக்கூடியது இது என்று உணர்த்துகின்றது என்பதாம்.

சிவபத்தராவார் யாவரெனின், முதல்வனுடைய உபகாரத்தை மறவாது கடைப்பிடித்துப் பத்தியினுல் ஏத்தி அம்முதல்வனுடைய திருவடியையடைந்த சீவன் முத்தராம் என்றுணர்க.

இணங்குதல் - நட்புச்செய்தல். சிவபத்தர்களோடு இணங்குக என்றமையால் மற்றவர்களோடு இணங்கா திருத்தல் வேண்டும் என்பதும் பெறப்பட்டது.

இங்ஙனமாகச் சீவன்முத்தர்கள் ஞானநிலையில் உறைத்து நிற்றல் நிலைபெறும் பொருட்டுச் சிவபத்தர்களோடு நட்புச்செய்க என்று சாதித்தபோது, உறவையும் பகையையும் ஒழித்துப் பல உயிர்களையும் தம் குழந்தைகள் என்று ஒரேதன்மையாகக் கருதும் சீவன் முத்தர்கள், சிலரிடத்தில் நட்புச்செய்தலும், சிலரிடத்தில் நட்பில்லாதிருத்தலும் பொருத்தம் அன்று என்று கூற, முதல்வனுடைய உபகாரத்தை மறவாது கடைப்பிடித்துப் பத்தியினால் ஏத்தி அம்முதல்வனுடைய திருவடியை அடையாதவர்கள் சுட்டி அறிவதாகிய விபரீத உணர்வை உணர்த்துவார்கள் ஆதலால் அவர்களிடத்தில் நட்பு இல்லாதிருத்தலே பொருத்தம் என்று கூறி, 'அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவராகலான்' என்னும் ஏதுவால் மேற்கோளைச் சாதித்தருளினார்.

முதல்வனுடைய திருவடியை அடையாதவர்கள் அஞ்ஞானத்தை உணர்த்துதல் எங்ஙனம் எனின், 'தெய்வம் என்பதோர் சித்தமுண்டாகி, முனிவிலாததோர் பொருளது கருதலும், ஆறு கோடி மாயா சத்திகள், வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின, ஆத்தமானார் அயலவர்கூடி, நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர், சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள், பற்றி அழைத்துப் பதறினர் பெருகவும், விரதமேபரமாகவேதியரும், சரதமாகவே சாத்திரம் காட்டினர், சமயவாதிகள் தத்தம் மதங்களே, அமைவதாக அரற்றி மலைந்தனர்' என்னும் திருவாசகத்தினால் உணர்க.

சிவபத்தரல்லாத அஞ்ஞானிகள் மும்மலங்களினும் மிகக் கொடியவர்கள். எதனாலெனின், தற்போதம் உண்டாகும் சமயம் வாய்த்த பொழுதுதான் மும்மலங்களும் அஞ்ஞானத்தை உணர்த்துதற்கு ஏதுவாகும்;

தற்போதம் உண்டாகாத சமயத்தும் சிவபத்தரல்லாத அஞ்ஞானிகள் தற்போதம் உண்டாகும்படி செய்துகொண்டு பலவகையான உபாயங்களினாலும் தம்மைப்போல விபரீத உணர்வுடையவராக அவ்விபரீத உணர்வைப் புகுத்தியே விடுவர் ஆதலால் என்க. எனவே அம்மலங்களினுங் கொடியராகிய இவரை அந்த மலங்களைவிட அதிகமாக அஞ்சி விட்டொழிதலே அறிவுடைமைக்குப் பொருத்தமென்று உணர்க.

இங்ஙனம் சீவன் முத்தர்கள் ஞானநிலையிலே உறைத்து நிற்றல் நிலைபெறும் பொருட்டுச் சிவபத்தர்களோடு நட்புச்செய்க என்றும், சிவபத்தரல்லாதவர்களோடு நட்புச் செய்யாதிருக்க என்றும் சாதித்தபொழுது, விபரீத உணர்வை உணர்த்தும் சிவபத்தரல்லாதவர்களோடு இணங்காதிருத்தலே போதியதாகும்; சிவபத்தர்களோடு இணங்குதல் எதற்கென்று வினவ, முதல்வன் காட்டியும் கண்டும் உபகரித்து நிற்கும் அத்துவிதநிலையை மறவாது கடைப்பிடிக்கும் தம்முடைய ஞானமாகிய கண்ணை இழக்கச்செய்து தீய நெறிக்கண் செலுத்தி மலங்களாகிய பிறவியாகிய குழியில் தள்ளித் துன்பத்தைச் செய்கின்றவர்கள் அன்பு இல்லாதவர்கள்; அந்த அன்பில்லாதவர்களிடத்தில் தொன்று தொட்டுப் பழகிவந்த சேர்க்கை நீங்கும்படி, முதல்வனுடைய உபகாரத்தை மறத்தலை நீக்கிமறவாது கடைப்பிடிக்கும் ஞானமாகிய கண்ணைத் தந்து பிறவியாகிய குழியிலிருந்தும் தூக்கி நன்னெறியில் செலுத்தி வாழச்செய்யும் சிவபத்தரிடத்திலே பேரன்புடையவர்களாய் அப்பேரன்பின் காரணமாக விளங்கும் சிவஞானமாகிய கண்ணினால் முதல்வனுடைய உபகாரத்தைக் கடைப்பிடித்து உணரப்பெற்ற மெய்யான தவமுடையவர்களை எல்லாக் கேடுகளுக்கும் மூலமாய்ச்

சிவபத்தர் அல்லாதவர்களுடைய சேர்க்கையை உண்டாக்கும் பிராரத்த வினைகள் வாதிக்கமாட்டா. ஆதலால், சிவபத்தர் அல்லாதவர்களுடைய இணக்கம் அறுதற்குச் சிவபத்தர்களோடு இணங்குதல்வேண்டும் என்று உணர்த்தி ஏதுவை உதாரணத்தால் வலியுறுத்தருளினர் என்று உணர்க.

உதாரணம் வருமாறு :

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்
சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை - அறப்பித்துப்
பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரும்
மெய்த்தவரை மேவா வினை.

என்பதாம்.

ஏதுவில் கூறியபொருளையே 'மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும் சிறப்பில்லார்' என்று உதாரணத்தில் விரித்துக் கூறியருளினர். முன் கூறியதொன்றனை வேறொரு பயன்கருதி மீண்டும் கூறுதலை அனுவாதம் என்பர். எதிர்மறை முகத்தால் சிவபத்தர்களது பெருமையை உணர்ந்து கொள்ளுதலே இந்த அனுவாதத்தினாலாகிய பயன் என்று உணர்க.

மலமென்பது மலத்தினாலாகிய பிறவியையுணர்த்தி நின்றது; ஆதலால் இது ஆகுபெயர் எனப்பட்டது. மலங்களினாலாகிய பிறவியாகிய குழியில் வீழ்க்கும் என்று பொருள் விளக்கும்படி வீழ்க்கும் என்று கூறினமையால், வீழ்க்கும் என்பது குறிப்பு உருவகமாயிற்று.

சிறப்பிலார் என்றதிலுள்ள சிறப்பு என்பது எல்லாவற்றினுஞ் சிறந்தது அன்பு ஆதலின் அந்த அன்பைக் குறித்துச் சிவனிடத்து அன்பில்லார் என்னும் பொருளில் நின்றது. திருக்குறள் அறன் வலியுறுத்தல்

1 ஆவது செய்யுளில், " சிறப்பு ஈனும் " எனவும். மெய் யுணர்தல் 8 ஆவது செய்யுளில் 'சிறப்பு என்னும் செம் பொருள்' எனவும் வீட்டையே சிறப்பு எனக் கூறி யிருக்கவும், இவ்விடத்து அன்பைச் சிறப்பென்றல் அத்திருக்குறளின் கருத்தோடு முரணுகாதோவெனின், முரணது; எவ்வாறெனின், அன்பு என்பது மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நான்கு வகைப்படும். அவற்றுள், மந்ததர அன்பாவது உலகப்பற்று முக் கால் பாகமும் கடவுட்பற்று காற்பாகமும் ஆதல். மந்த அன்பாவது உலகப்பற்றுப் பாதியும் கடவுட்பற்றுப் பாதியுமாதல். தீவிர அன்பாவது உலகப்பற்றுக்காற் பாகமும் கடவுட்பற்று முக்காற்பாகமும் ஆதல். தீவிர தர அன்பாவது உலகப்பற்று அறவே இன்றி முழுதுங் கடவுட்பற்றேயாதல். இத்தீவிரதர அன்பையே இச் செய்யுளில் சிறப்பு என்றுர்.

இத்தீவிரதர அன்புதான் பதினொராஞ் சூத்திரத் தில் அயரா அன்பு எனப்பட்டது. அயரா அன்புடை யார் சிவானந்தானுபவமாகிய வீட்டையுடையராதலின் 'அயரா அன்பின் அரன்கழல் செலுமே' என அப் பதினொராஞ் சூத்திரத்திற் கூறினுர். இந்நிலையில் அன்பு செய்யும் உயிரும், அன்பும்,அன்பு செய்யப்படும் சிவமும் உள்ளன வேனும் பிரிப்பின்றி அத்துவிதமாய்க் கலந்து நிற்கும், இக்கருத்தேபற்றி 'அன்புசிவம் இரண்டென்பர் அறிவிலார், அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார், அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின், அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே' எனத் திருமூலநாயனுரும், ' இன்பமே என்னுடைய அன்பே' என மணிவாசகப் பெருமானும் அருளிச் செய்வாராயினர்.

ஆகவே அன்பு செய்யப்படும் பொருள் பற்றித் திருக்குறளில் வீட்டைச்சிறப்புஎன்றும், அப்பொருளில்

நின்றும் பிரிக்கமுடியாத அன்புபற்றி இந்நூலில் அன்பைச் சிறப்பு என்றும் கூறினமையால் முரணில்லாமை அறிக. பதினொராஞ் சூத்திரத்தில் இச்சையே பேரானந்தமாய் விளங்கித் தோன்றும் என்றதும் இக்கருத்துப் பற்றியே யாம்.

பித்து என்றது அன்பைக்குறித்து நின்றது. தீவிரதர அன்புடையார் பித்துக்கொண்டவன்போலத் தன்னை மறந்து இருத்தலின் அன்பைப்பித்து எனக் கூறினார்.

தவம், மெய்த்தவம் பொய்த்தவம் என இருவகைப் படும். மெய்த்தவம் சரியை கிரியை யோகங்கள், பொய்த் தவம் யாகம் விரதமுதலாயின. இவற்றின் விரிவை எட்டாஞ் சூத்திரத்துட்காண்க. இனி, மெய்த்தவம் எனப்படும் சரியை யாதிகளும் மலத்துடன் கூடிநின்று செய்யப்படுவனவே அன்றி மலம் அறவே நீங்கிச் செய்யப்படுவன அல்ல. ஆயினும் யாகாதியைநோக்க மெய்த்தவம் என்னப்பட்டன. பரன் உணர்வால் உணரும் சிவஞானம் மலம் அறவே நீங்கிய செயலாத லாலும் மேற்செய்ய வேண்டியதில்லாத முடிந்த நிலை யாதலாலும் அச்சிவஞானம் ஒன்றே மெய்த்தவம் எனப் படுமாதலால் அதனையுடையாரை மெய்த்தவர் என இச்செய்யுளிற் கூறினார்.

வினை என்பது அஃறிணைப் பெயர்ச்சொல். "தெரி நிலையுடைய அஃறிணை யியற்பெயர் ஒருமையும் பன் மையும் வினையொடுவரினே" என்பது தொல்காப் பியம் சொல்லதிகாரம். வினை என்னும் ஒருமையானது ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவான பால்பகா அஃ றிணைப்பெயராய் நின்று மேவா என்னும் பன்மை வினைகொண்டு முடிந்தது. ஆதலால் வினை என்ப தற்கு வினைகள் என உரை செய்யப்பட்டது.

சிவபத்தரோடு இணங்குதலால் சிவபத்தரல்லா தாரைச் சேரும்படி செய்யும் பிராரத்தவினை தாக்கா திருப்பது எவ்வாறெனின், சிவபத்தரிடத்தில் அன் புடையராய் மனம் வாக்குக் காயங்களை அச்சிவபத்த ரிடத்திற் செலுத்துவோர்க்கு உலக அனுபவ உணர்வு மாறிச் சிவாநுபூதி உணர்வு மேம்பட்டு நிகழும்; நிகழவே பூதகாரியமாகிய உடம்பைப் பற்றிவரும் பிரா ரத்த வினைகளின் அனுபவம் அச்சிவாநுபவ உணர் வுடையாருக்கு அனுபவமாதலில்லை; இல்லையாகவே அப்பிராரத்த வினைகள் சிவாநுபவ உணர்வுடையா ரைப் பற்றமாட்டா; பற்றுது ஒழியவே அப்பிராரத்த வினைகள் காரணமாக உண்டாகும் சிவபத்தரல்லாத சிறப்பில்லார் தந்திறத்துச்சேர்வை அறக்கெடும்என்க. இவ்வாறு சிவபத்தர் இணக்கத்தால் அல்லாதார் இணக்கத்துக்கு உரிய பிராரத்தவினை தாக்காமையை அறிவிக்கவேண்டிச் செய்யுளில் "சிறப்பில்லார் தந்தி றத்துச் சேர்வை அறப்பித்துப் பத்தர் இனத்தாய்ப் பரன் உணர்வி ஞல்உணரும் மெய்த்தவரை மேவா வினை" என்ருர்.

பரன் உணர்வால் உணரப்படுந்தவமே அருள் நடையாதலின் மெய்த்தவமாகும். பரன் உணர்வால் உணரப்படாத மற்றத் தவங்களெல்லாம் மலநடையா யுள்ளது. ஆதலால் மெய்த்தவன் எனப்படாது என் றுணர்க.

உண்மை ஞானத்தை நிலைபெறுத்தும் சிவபத்தர் களோடு இணங்கிஞல் அல்லாமல் வினைகாரணமாகத் தொன்றுதொட்டுப் பழகிவந்த சிவபத்தரல்லாதவா களுடைய இணக்கம் நீங்காது. ஆதலால் சிவபத்தர் அல்லாதவர்களுடைய இணக்கம் நீங்குதற்பொருட்டுச் சிவபத்தர்களோடு இணங்குதல் வேண்டுமென்று இதஞல் வலியுறுத்தப்பட்டது என்று உணர்க.

## மூன்றும் அதிகரணம்

'இனிப் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக் கண்டு வழிபடுக என்றது' என்பது மேற்கோள்.

இம்மேற்கோள் கூறும் பொருள் யாதெனின், உண்மை ஞானத்தை நிலைபெறுத்தற் பொருட்டுச் சிவபத்தர்களோடு இணங்கிய சீவன்முத்தர்கள் சிவ பத்தர்களோடிணங்கிய இணக்கம் நிலைபெறுதற் பொருட்டு முதல்வனது உபகாரத்தை மறவாது கடைப்பிடித்துப் பத்தியினுல் அம்முதல்வனுடைய திருவடியை அடைந்த பத்தர்களுடைய திருவேடத்தையும் சிவாலயத்தையும் முதல்வன் என்றே ஐயம் இன்றித் தெளிந்து வழிபடுக என்று சிவபத்தர்களோடு இணங்கிய பின் செய்யவேண்டியதை உணர்த்துகின்றது என்பதாம்.

காண்டலாவது ஐயமின்றித் தெளிதலாம்.

சிவபத்தரையும் சிவாலயத்தில் திருமேனிகொண்டெழுந்தருளியிருக்கும் மூர்த்திகளையும் சிவன் எனக் கண்டு வழிபடுக என்று கூருமல் சிவபத்தருடைய திருவேடத்தையும் சிவாலயத்தையும் மட்டும் சிவன் எனக் கண்டு வழிபடுக எனக் கூறிய கருத்தென்னையெனின், காமக்கிழத்தியராகிய விலைமகளிர் வடிவிற் காணப்படும் ஆடை, சந்தனம் அணிகலன் முதலாயின காட்சி மாத்திரையில் காமுகரை வசப்படுத்தி அக் காமுகர்க்கு இன்பஞ்செய்யுமாறு போலச் சிவபத்தர் அணிந்திருக்குந் திருநீறு உருத்திராக்கம் முதலிய திருவேடமும், சிவபெருமான் எழுந்தருளியிருக்குஞ் சிவாலயமும் காட்சிமாத்திரையில் மெய்யுணர்வுடைய

சீவன் முத்தர்களை வசஞ்செய்து இன்பஞ் செய்யுந் தன்மையன.

திரு வேடமும் சிவாலயமும் பார்த்த அளவில் இன்பஞ் செய்தல்பற்றிப் பரமேசுரன் விளங்கித் தோன்றுதலுக்குரிய இடங்களாகிய அவ்விரண்டினையும் பரமேசுரனென்று உபசரித்துக் கூறியுள்ளார். திருவேடம் இன்பஞ் செய்தலை, "சேலும் கயலும் திளைக்கும் கண்ணார் இளங்கொங்கையில் செங்குங்குமம்போலும் பொடியணி மார்பிலங்கும் என்று புண்ணியர் போற்றிசைப்ப" என்னும் திருபல்லாண்டு 8 ஆவது செய்யுளானும் அறிக.

திருவேடம் சிவனடியார்க்கு இன்பஞ்செய்யும் என்பதனைப் பெரியபுராணத்தில் திருநாவுக்கரசு நாயனார் புராணம் 140 ஆவது செய்யுளில் கல்லைத் தெப்பமாகக்கொண்டு கரையேறித் திருவதிகைக்குச் செல்லுங் காலத்து வீதியுள் திருநாவுக்கரசர் புகுந்தாரென்று சொல்லவந்த சேக்கிழார் சுவாமிகள். "தூயவெண்ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும், நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப், பாய்வதுபோலன்பு னீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல், மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே" என்று சிறப்பித்துக் கூறியதனாலும், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணம் 269–270 ஆவது செய்யுட்களில் "சிந்தையிடை யறுவன்பும் திருமேனி தனிலசைவும், கந்தைமிகை யாங்கருத்தும் கையுழவா ரப்படையும், வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற்பொலி திருநீறும், அந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய" எனவும், "கண்ட கவுணியக்கன்று கருத்திற் பரவு மெய்க்காதல், தொண்டர் திருவேடம் நேரே தோன்றிய தென்று தொழுதே" எனவும் சீகாழிப்

பதிக்குத் திருநாவுக்கரசு சுவாமிகள் எழுந்தருளிய காலத்துத் திருஞானசம்பந்த சுவாமிகளுக்கு அப்பர் சுவாமிகள் திருவேடத்தைத் தரிசிக்க விருப்பமிருந்து அவ்விருப்பத்தின்படி தொண்டர் திருவேடம் நேரே தோன்றியதென்று தொழுததாகக் கூறியவாற்ருனும் அறிந்து கொள்க.

சிவாலயம் சிவனடியார்க்கு இன்பஞ்செய்யும் என்பதனைச் சிவாலயத்தின் கோபுரத்தைத் தூரத்தே கண்டமாத்திரத்தே பணிந்தார் என்ற சரிதங்களாலும் அறிக.

இங்ஙனம் சீவன்முத்தர்கள் சிவபத்தர்களோடு இணங்கிய இணக்கம் நிலைபெறுதற்பொருட்டுத் திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரனென்று ஐயமின்றித் தெளிந்து வழிபடல்வேண்டும் என்று சாதித்தபொழுது உண்மை ஞானமுடைய சீவன்முத்தர்களுக்கு வேறுபாடில்லாமல் எவ்விடமும் பரமேசுரன் என்று காணுதலே பொருத்தமாதலாலும் நின்ற திருத்தாண்டக முதலியவற்றுள் எல்லாம் பரமேசுவரனுகவே ஓதுதலாலும் திருவுருத்திரத்துள் வேறுபாடில்லாமல் உயிருள்ளபொருள் உயிரில்லாத பொருளாகிய எல்லாவற்றினையும் தனித்தனியே எடுத்துச்சொல்லி அவற்றிற்கு வழிபாடு கூறுதலாலும் இவ்விடத்தில் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிறப்பாகக் கூறியதன் காரணம் என்னஎன்று வினவ; முதல்வன் எவ்விடத்தும் வியாபகமாய் நின்ருலும் திருவேடத்திலும் சிவாலயத்திலும் தயிரில் நெய் விளங்கி நிற்றலைப்போல விளங்கி நிலைபெற்று நிற்பன். இவ்விரண்டுமல்லாத ஏனையிடங்களில் பாலில்நெய் வெளிப்படாது மறைந்து நிற்றலைப் போல வெளிப்படாமல் மறைந்து நிற்பன். ஆதலால் திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரனெனக்

கண்டு வழிபடல் பொருத்தம் என்று, 'அவன் மற்றிவ் விடங்களில் பிரகாசமாய் நின்றே அல்லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்' என்னும் ஏதுவால் மேற் கோளைச் சாதித்தருளினர். எல்லாப் பொருளிடத்தி லும் இறைவன் கலந்து விளங்குகின்ருன் என்பதைத் தெளிந்துகொள்ளும் பொருட்டே திருவுருத்திரத்துள் உயிருடைய பொருள் உயிரில்லாதபொருள் ஆகிய எல்லாவற்றிற்கும் வழிபாடு கூறப்பட்டுளது என்று உணர்க.

இங்ஙனம் முதல்வன் திருவேடத்திலும் சிவாலயத் திலும் தயிரில் நெய்விளங்கி நிற்றல்போல விளங்கி நிற்பன் ஆதலால் அந்த இரண்டினையும் பரமேசுரன் என்று கண்டு வழிபடல் வேண்டும் எனச்சாதித்த பொழுது, முதல்வன் திருவேடத்தில் விளங்கி நிற்றல் எங்ஙனம் என்று வினவ; வாக்கு மனங்களைக் கடந்து அசிந்திதனுய் நின்ற முதல்வன் உலகத்திலுள்ளவர்கள் தன்னை அறிந்துகொள்ளுதற் பொருட்டுத் திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய தன்னுடைய திருவடிவத்தைத் தன்னுடைய அன்பர்கட்குக் கொடுத் தலாலும், அந்த அன்பர்கள் தன்னைச் சிவோகம் பாவ னையால் அறியும்படி செய்தலாலும், அங்ஙனம் ஒரு குறியின்கண் வைத்துணரும் அந்த அன்பர்களைத் தன்னுடைய வியாபகத்திற்குள்ளாக இருக்கச்செய்த லாலும், குறியில் வைத்து உணராது தன்னை உள்ள வாறு உணரும் அந்த அன்பர்களிடத்தில் தயிரில்நெய் விளங்கி நிற்றல்போல விளங்கி நிற்பன். இத்தன்மை யில்லாதவர்களாய பாசமுடையவர்களிடத்தில் பாலில் நெய்விளங்காது நிற்றல்போல விளங்காது நிற்பன் என்று முதல்வன் திருவேடத்தில் விளங்கி நிற்றலை உணர்த்தி உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தரு ளினர் என்று உணர்க.

உதாரணம் வருமாறு :

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலால் - தன்னுணரும்
நேசத்தார் தம்பால் நிகழுந் ததிநெய்போல்
பாசத்தார்க் கின்றாம் பதி.

என்பதாம்.

தன்னுணரச் செய்து என்று செய்து என்னும் ஒரு சொல்லை வருவித்து உரை கூறியுள்ளார். இங்ஙனம் ஒருசொல்லை வருவித்து உரைத்தலை இலக்கண நூலார் சொல்லெச்சம் என்பர்.

இருத்தல் என்பது அல்லீற்றுப் பிறவினைத்தொழிற் பெயர். ஆதலால் அன்பர்களை இருத்தல் (இருக்கச் செய்து) என்று உரை கூறியுள்ளார். கொடுத்து, செய்து, இருத்தலான் நிகழும் என்று இயைந்து நிற்கும்.

முதல்வன் அன்பர்களிடத்தில் விளங்கி நிற்றலுக்குக் கொடுத்தலால், செய்தலால், இருத்தலால் என்று வெளிப்படையாகக் கூறிய ஏதுக்களை அல்லாமல் தன்னுணரும் நேசத்தார் என்னும் பெயரடையாலும் ஒரு ஏதுவைக் கூறியுள்ளார். அந்த ஏதுவாவது தன்னை உணருதலால் என்பதாகும். தன்னை என்னும் இரண்டாம் வேற்றுமை யுருபு மறைந்து வந்தது. தன்னுணர, தன்னுணர, தன்னுணரும் என்று உணர்தலை மூன்று இடத்தில் கூறினபடியால் வேறுவேறு பொருள் உரைத்தருளினர்.

பாசத்தார்க்கு என்பது நான்காம் வேற்றுமைப் பொருளைத்தராமல் ஏழாம் வேற்றுமைப்பொருளைத் தந்தது; ஆதலால் உருபுமயக்கம் எனப்படும். இன்மை என்பது விளங்காது நிற்றல் என்னும் பொருளைத் தந்து நின்றது.

இங்ஙனம் சங்கமமாகிய திருவேடத்தில் முதல்வன் தயிரில் நெய்போல விளங்கி நிற்பன் என்று விளக்கிய பொழுது, சங்கமமாகிய திருவேடத்திற்குக் கூறிய தன்மைகள் இல்லாத தாவரவடிவமாகிய சிவாலயத்தில் மந்திர சாந்நித்தியமுள்ளபொழுது முதல்வன் விளக்க மாய் நிற்றல் பெறப்படும். மந்திர சாந்நித்தியம் இல் லாதபொழுது பெறப்படாது என்றுகூற; விறகில் உள்ளதீ கடைகோலால் கடைந்தபொழுது விறகிற்கு வேறாய் விளங்கித் தோன்றும். கடையாத பொழுது விறகிற்கு வேருக விளங்கித் தோன்ருது. அதுபோல உயிர்களுக்குப் போகத்தையும் முத்தியையும் கொடுத் தற்பொருட்டுக் காணப்பட்ட தாவரத்திருவுருவின் கண், கலப்பினுல் அதுவேதாளுயும் (தாவரத்திருவுரு வாகியும்) பொருட்டன்மையால் அத்தாவரத் திருவுரு வத்திற்கு வேறு பொருளுமாந் தன்மையுமுடைய முதல் வன் தாவரத் திருவுருவமே தாளுக (சிவமாக)க் காணுதவர்களுக்கு அவர்களால் அறியப்பட்டதொரு மந்திர சாந்நித்திய மில்லாதபொழுது அத்திருவுரு வின்கண் விளங்காது நிற்பன்; மந்திர சாந்நித்திய முள்ளபொழுது விளங்கித் தோன்றுவன்.

இங்ஙனமன்றி அத்தாவரத் திருவுருவமே தாளுக (சிவமாக)க் காணும் உண்மைத்தவம் உடையவர்க ளுக்கு அத்தாவரத் திருவுருவமாய் விளங்கித் தோன் ருன்கொல்லோ (தோன்றுவன்) எனக் கூறி உதார ணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினர் என்றுணர்க.

உதாரணம் வருமாறு :

கண்டதொரு மந்திரத்தால் காட்டத்தின் அங்கிவே(று)
உண்டல்போல் நின்றங் குளதாமால் - கண்டவுருத்
தானதுவா யன்ருனுன் தானதுவாய்த் தோன்ருனே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு.

என்பதாம்.

காணாதார்க்கு என்னும் ஒருசொல்லை வருவித்துப் பொருள் கூறியுள்ளார். இங்ஙனம் சொல்லி வருவித்தலைச் சொல்லெச்சம் என்பர்.

மந்திரத்தால் என்னும் உவமேயத்தின் அடைமொழிக்குத் தக்கபடி உவமானத்திலும் கடைந்தால் என்பது வருவித்துரைக்கப்பட்டது.

உளதாமால் என்பதிலுள்ள ஆல் அசை. ஆன் என்பது வினையாலணையும் பெயராய், முதல்வனை உணர்த்தி நின்றது. தோன்றானோ என்பதிலுள்ள ஓகாரம் எதிர்மறை; ஆதலால் தோன்றுவன் எனக் கொள்க. முதல்வனைத் தோன்றானோ என்று உயர்திணை ஆண்பால் வாய்பாட்டால் கூறிய ஆசிரியர் உளது எனவும், அன்று எனவும், அஃறிணை ஒன்றன் பால் வாய்பாட்டால் கூறியது பொருள் என்னுந் தன்மைபற்றி என்று உணர்க.

'தானதுவா யன்றான்' என்பதிலுள்ள தானதுவா யன்றுதல் என்னும் பெயரடை தானதுவாய் அன்றுதலால் என்னும் ஏதுவாய் நின்று முதல்வன் அவரவர்களின் பாவனைக்குத் தக்கவாறு விளங்குவன் என்பதனை விளக்கி நின்றது.

முதல்வன் அதுவாதலும் அன்றாதலும் மூர்த்தமாகிய தாவரவடிவிற்குமட்டுமன்று; உயிராகிய சங்கம வடிவிற்கும் ஒக்கும். ஆயினும் சங்கமமாகிய சிவபத்தரைப்பற்றிக் கூறிய மேலை வெண்பாவில் கூறாமல் இவ்வெண்பாவில் கூறியது என்னை எனின், சிவபத்தரிடத்து இறைவன் பிரகாசமாய் நிற்றல் எவ்வாறு கூடும் என்ற ஆசங்கைக்குச் சிவனை உள்ளவாறு உணர்தலினால் கூடும் என்று சமாதானங்கூற வேண்டுதலின் என்க. தாவர வடிவின்கண் இறைவன் பிரகாசமாய் நிற்றல் எவ்வாறு கூடும் என்னும் ஆசங்கையை

அதுவாய் நிற்றல் பற்றிக்கூடும் என்பதனுலன்றி நீக்க லாகாமையின் தானதுவாய் அன்ருதலே இச்செய்யுளிற் கூறினரென அறிக. தாவர சங்கமமாகிய ஈரிடத்தும் அதுவாதலும் அன்ருதலும் ஒக்கும் என்பது முன்னர்க் கூறப்படும் ஒழிபு அதிகரணத்தாற் பெறப்படும்.

மேலே வெண்பாவில் சிவபத்தரிடத்து இறைவன் விளங்கித் தோன்றுவன் என்பதற்குத் தயிரினிடத்து நெய் விளங்கித் தோன்றுவதை உவமை கூறினர்; கூறவே ஏனைய உயிர்களிடத்துப் பாலின் நெய்போல மறைந்து நிற்பன் என்பது பெறப்பட்டது. இவ் வெண்பாவில் சிவலிங்காதி மூர்த்தங்களில் மறைந்து நிற்பன் என்பதற்கு விறகினிடத்துத் தீ மறைந்துநிற் பதை உவமை கூறினர். இவ்வாறு தாவரத்தினிடத் தும் சங்கமத்தினிடத்தும் விளங்குபவன் என்னும் இக் கருத்தேபற்றி "விறகிற் றீயினன் பாலிற்படு நெய் போல், மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்", என்று அருளிச்செய்தனர் அப்பர் சுவாமிகளும். இப் பாசுரத்தின் கருத்து ஒன்பதாஞ் சூத்திரத்து மூன்ரும் அதிகரணத்து இரண்டாவது வெண்பாவில் கூறி யிருக்கின்றமையால் அவ்விடத்துக்காண்க. அங்கே இதயத்தில் விளங்கித் தோன்றுதற்கு விறகிற்றீ உவமை கூறப்பட்டது.

## நான்காம் அதிகரணம்

'இனி இவ்விடங்களின் வழிபடுக என்றது' என்பது மேற்கோள்.

இம்மேற்கோள் கூறும்பொருள் யாதெனின், முன் கூறப்பட்ட கலைதலும், இணங்குதலும், வழிபடுதலும் சீவன் முத்தர்களுக்குத் தாமாகவே உள்ள இலக்கண மாகும். ஆதலால் கலைவர் இணங்குவர் வழிபடுவர்

என்று அநுவாதமாக ஓதல்வேண்டும். அங்ஙனமன்றிக் களைக இணங்குக வழிபடுக என விதியாக (ஏவலாக) ஓதியதன் காரணம் என்ன என்று வினவச் சிவபத்தர்களது திருவேடமும் சிவாலயமும் ஆகிய இந்த இரண்டிடங்களிலும் வழிபாடுசெய்க என்று விதித்தலை வலியுறுத்துகின்றது என்பதாம்.

இவ்வதிகரணம் முன்னுள்ள மூன்று அதிகரணங்களின் ஒழிபாகவுள்ளது என்றுணர்க. ஆதலால் முன் இச்சூத்திரம் மூன்று அதிகரணங்களையுடையது என்பதனோடு மாறுபடாது.

இவ்விடங்கள் என்றது திருவேடமும் சிவாலயமுமாகும். வழிபடுக என்னும் எடுத்தலோசையால் அநுவதித்துணர்த்துவதே பொருத்தமுடையது என்பாரை மறுத்து விதித்தலை வலியுறுத்தருளினர்.

வழிபடுக என்று விதித்தலை வலியுறுத்தினமையால் இனம்பற்றிக் களைக என்பதும் இணங்குக என்பதும் வலியுறுத்தப்பட்டன என்றுணர்க.

இங்ஙனம் ஆணவம் மாயை கான்மியம் என்னும் மலங்களைக் களைதலும் சிவபத்தர்களோடு இணங்குதலும் திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழிபடுதலும் ஆகிய இம்மூன்றும் சீவன்முத்தர்களுக்குத் தாமாகவே உள்ள இலக்கணமாகும். ஆதலால் இம்மூன்றையும் அநுவாதமாக ஓதுதலே பொருத்தம் என்பவர்களை மறுத்துக் களைக இணங்குக வழிபடுக என்று விதியாக ஓதுதலை வலியுறுத்தியபொழுது, மூன்றுமதிகரணத்தில் வழிபடுக என்பதனால் எய்திய வழிபாட்டை மீண்டும் விதித்தல் பயனுடையதன்று என்றுகூற, நரம்பு நாடி இறைச்சி என்பு முதலிய தாதுக்களின்கண் வேறுபாடு இல்லாமல் அதுவது

தானும் (அந்த நரம்பு முதலிய தாதுக்களாய்) வருகின்ற உயிர் நரம்போ, நாடியோ, இறைச்சியோ, என்போ என்று பையை மறித்துப் பார்ப்பதுபோலப் பார்க்கின்றவர்களுக்கு அந்த உயிர், அந்த நரம்பு, நாடி, இறைச்சி, என்பு முதலியன ஆகாமல் அந்நரம்பு முதலியவைகளுக்கு வேறாகியும் இருத்தல்போல, அம் முதல்வனும் உயிருள்ளபொருள் உயிரில்லாதபொருள் ஆகிய எல்லாவற்றிலும் கலப்பால் அதுவது தானாகியும் (அப்பொருள்களாகியும்) பொருட்டன்மையால் அல்லனாகியும் (அப்பொருள்களுக்கு வேறானவனாகியும்) நிற்பன். ஆதலால் அதுவது தானாய் (எல்லாப் பொருள்களையும் முதல்வனாய்) காணுகிற காட்சிபற்றி எய்திய வழிபாடு அல்லனாய் (அப்பொருள்களுக்கு வேறானவனாய்) நிற்றலைக் காணும்பொழுது எய்தாது ஆதலால் முதல்வனை அப்பொருளுக்கு வேறானவனாகக் காணும்பொழுதும் எய்துவிக்க வேண்டுதலின் விதித்தல் பயனுடையது என்றுகூறி, 'நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனுமாகலான்' என்னும் ஏதுவால் மேற்கோளைச் சாதித்தருளினர் என்க.

ஏதுவில் 'அவையாகாவாறு அப்புருடனும்' என்றமையால் அதுவதுவாய் (எல்லாப் பொருளையும் முதல்வனாய்) காணும் காட்சிபற்றி எய்திய வழிபாடு அல்லனாய் (எல்லாப் பொருள்களுக்கும் வேறானவனாய்) நிற்றலைக் காணும்பொழுது எய்தாமையால் அவ்வழிபாட்டை அல்லனாய்க் காணும்பொழுதும் எய்துவிக்க வேண்டும் என்பது பெறப்பட்டது. இதனை உணர்ந்து கொள்ளும்பொருட்டு மேற்கோளில் 'இவ்விடங்களை' என்று கூறாமல் இவ்விடங்களில் என்று முதல்வனை வேறுபடுத்திக் கூறியருளினர் என்க.

எய்தாதது எய்துவிப்பதும், எய்தியது இகந்து படாமற்காப்பதும், எய்தியது ஒருமருங்கு மறுப்பதும் என்று விதிகள் மூன்றுவகைப்படும். இவற்றுள் வழி படுக என விதித்த விதி எய்தியது இகந்துபடாமல் காத்தது என்று உணர்க.

அவையாகாவாறு என்பதிலுள்ளவாறு உவமவுரு பின் பொருள்தந்து நின்றது. முதலானவற்றை என்பது இரண்டாம் வேற்றுமைப் பொருளைத் தராமல் ஏழாம் வேற்றுமைப் பொருளைத்தந்தது. ஆதலால் உருபு மயக்கம் என்று உணர்க.

இங்ஙனம் எய்திய வழிபாட்டை மீண்டும் வழிபடுக என்று விதித்தல் பயனுடையதன்று என்பவர்களை, முதல்வன் எல்லாப் பொருள்களிலும் அதுவதுவாய் நிற்றலைக் காணும்பொழுது எய்திய வழிபாடு அல்ல ஞய்க் காணும்பொழுது எய்தாமையால் அல்லனுய்க் காணும்பொழுதும் எய்துவிக்க வேண்டுதலால் விதித்தல் பயனுடையது என்றுகூறி மறுத்தபோது, அவர்கள் கலப்பால் அதுவதுவாதலும் பொருட்டன்மையால் அல்லனதலும் முதல்வனுக்குரிய இயல்பாகும். இந்த இயல்பு எல்லாப் பொருள்களிடத்திலுமுண்டு. அங்ஙன மாகவும் அல்பொருள்களுள் இவ்விடங்களின் மட்டுமே வழிபாடு விதித்தற்குக் காரணமென்ன என்று வினவ; முதல்வன் உயிருள்ளபொருள் உயிரில்லாத பொரு ளாகிய எல்லாவற்றிலும் நிற்கும் நிலைமையை அறிந்த வர்களுக்கு, கண்ணும் ஞாயிறும் வேருதல்போல அது வும் இதுவும் (பொருள்களும் முதல்வனும்) என்று பிரித்து ஓதப்படும் பேதநிலையை உடையவனும் அல்ல ஞய்; கலப்பினுல் உயிர் உடலாய் நிற்றலைப்போல, முதல்வனும் கலப்பினுல் அதுவே (அப்பொருள்களே) என்று ஓதப்பட்ட அபேதநிலைமை உடையவனும் அல்லனுய்; குணகுணிபோல அதுவாகிய இது என்று

பிரித்து ஓதாமல் ஓதப்படும் பேதாபேத நிலைமையை உடையனும் அல்லனுய்; பேதம் அபேதம் பேதாபேதம் என்னும் மூன்றுக்கும் பொதுவாய் ஆன்மபோதமும் கண்ணொளியும்போல் அத்துவித நிலையை உடையன். ஆதலால் எல்லாப் பொருள்களும் அவனது வடிவமே ஆகும். ஆயினும் அத்துவித சித்தாந்தத்தைப் பெற்றுடையோய்! அப்பொருள்களுள் அன்பு தோன்றுமிடத்தில் வழிபடுவாயாக என்று கூறி, உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினர் என்றுணர்க.

உதாரணம் வருமாறு :

அதுவிது வென்ற தலுவல்லான் கண்டார்க்(கு)
அதுவிது வென்றதையும் அல்லான் - பொதுவதனில்
அத்துவித மாதல் அகண்டமும் தைவமே
அத்துவிதி அன்பின் தொழு.

என்பதாம்.

முன்னர் வந்துள்ள அது இது என்பது உம்மைத் தொகை; ஆதலால் அதுவும் இதுவும் என்று பொருள் கொண்டுள்ளார். பின்னேயுள்ள அது இது என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை; ஆதலால் அதுவாகிய இது என்று பொருள் கொண்டுள்ளார்.

அது அல்லான் என்பதிலுள்ள அல்லான் என்பதனை அது என்றது என்பதனேடும் கூட்டி உரை கூறியுள்ளார். என்றது என்பதனையும் அது என்பதனேடு கூட்டி உரை கூறியுள்ளார்.

அல்லான் என்னும் குறிப்புவினைமுற்று எச்சப் பொருளைத்தந்து நின்றது.

என்றது என்னும் குற்றியலுகரம் ஐகாரச்சாரியை ஏற்று 'என்றதை' என்று வந்துள்ளது, அது இது என்றதையும் என்பதிலுள்ள உம்மை முன்வந்துள்ள

அதுவிது என்பதையும் (பேதத்தையும்) அது என்றது என்பதையும் (அபேதத்தையும்) தழுவி நின்றது; ஆதலால் இந்த உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை எனப்படும். பொதுவது என்பதிலுள்ள அது என்பது ப்குதிப்பொருள் விகுதி. தைவம் என்பது தேவனது உடைமை என்னும் பொருளுடைய வடமொழிச்சொல்.

ஆயினும் என்னும் ஒருசொல் வருவித்துரைக்கப் பட்டது. இங்ஙனம் ஒருசொல்லை வருவித்தலைச் சொல் லெச்சம் என்பர். அன்பென்பது ஆகுபெயர்; ஆதலால் அன்பு விளையுமிடம் என்று உரைகூறியுள்ளார். அன்பு என்பதற்கு ஏழாம் வேற்றுமை உருபு விரித்து அன்பு விளையுமிடத்தில் என்று உரைகூறியுள்ளார்.

'திருக்கோயிலுள் இருக்கும் திருமேனியின்' அன்றி எங்கும் உருக்காணா ஒண்ணுத பால் முலைப்பால் விம்மி ஒழுகுவதுபோல் வெளிப்பட்டருளுவதாகி அடிப்பட்டு வரும் (தொன்றுதொட்டு வரும்) அன்பு தோன்றுமை யால் அவ்விடத்தில் செய்யும் வழிபாடே அத்துவித ஞானத்தை நிலைபெறுத்துந் தன்மையாகிய பயனுடை யது என்பதனை விளக்குவார் ஏதுவில் கூறிய பொரு ளையே 'அத்துவிதமாதல் அகண்டமும் தைவமே' என்று அநுவதித்து 'அத்துவிதி அன்பின்தொழு' என்று கூறியருளினர். அத்துவிதி என்பது அண்மை விளி. ஆதலால் இயல்பாய் வந்தது. அத்துவிதி என்பது அத்துவித ஞானத்தை நிலைபெறுத்தலாகிய பயனைக்குறித்து நின்றது. ஆதலால் இது பயனுணர குறிப்புப் பெயராயிற்று.

பிறபெயரால் விளிக்காமல் அத்துவிதி என்னும் பெயரால் விளித்து, தொழு என்று விதித்தமையால் விதிக்குப்பயன் அத்துவித ஞானத்தை நிலைபெறுத்தல் என்பது பெறப்பட்டது.

சிலர், அது இது என்பன அருவுருவாகிய திரு மேனி எனக்கொண்டு அதற்குப் பொருத்தமாக இங்கு உரைகூறுவர். அவர்கள் அன்பின் என்பதனை ஏதுப் பொருளில் வரும் ஐந்தாம் வேற்றுமையுருபேற்ற இயற் பெயராகக் கொள்வர்.

இங்ஙனம் முதல்வன் உயிருடைய பொருள் உயிர் இல்லாத பொருளாகிய யாவற்றிலும் பேதம் அபேதம் பேதாபேதம் என்னும் இம்மூன்றனுக்கும் பொதுவாய் ஆன்மபோதமும் கண்ணொளியும்போல அத்துவிதமாய் நிற்றலால் அப்பொருள்களெல்லாம் அவனுடைய வடிவமாகும். ஆயினும் அவைகளுள் அன்பு தோன்று மிடத்தில் வழிபடும் வழிபாடே அத்துவித ஞானத்தை நிலைபெறுத்தும் என்று சாதித்தபொழுது, நிலைத்து உள்ள சிவசொரூபத்தைக்காட்டாது மறைத்துநிற்கும், நிலைத்திராத அசத்தாகிய பிரபஞ்சங்களை நிலைத்திராத தன்மையுடையன என்று அறிந்து நீங்கியபொழுது வெளிப்பட்டுத் தோன்றும் சிவஞானம் அத்துவித ஞானத்தை உணர்த்தும்; ஆதலால் அந்த அத்துவித ஞானத்தின் பொருட்டுச் சிவபத்தர்களையும் சிவாலயத் தையும் வழிபடுக என்று வேறே பழிபாடு கூறுதல் மிகையாம்; ஆதலால் பொருந்தாது என்றுகூற, உடம் பினைப் பற்றிநிற்கும் பிராரத்தவாசனை உயிரைத் தாக் கும் வரையிலும் அப்பிராரத்த வாசனையின் தாக்கத லால் விருப்பு வெறுப்புக்களும், விருப்பு வெறுப்புக் களால் நிலம் முதல் மாயை இறுதியாகவுடைய ஏக தேசப் பொருள்கள் தோன்றுதலும், அங்ஙனம் தோன் றிய ஏகதேசப் பொருள்களைச் சுட்டி அறிவதாகிய விபரீத உணர்வுமாகிய அசத்தாகிய பிரபஞ்சங்கள் நீங்கினபொழுதும் வந்து சேர்ந்து மேற்பட்டு நிற்பன வாகும். ஆதலால் இங்ஙனம் நீங்கிய பிரபஞ்சங்கள் மீண்டும் வந்து மேற்பட்டு நிற்றலுக்குக் காரணம் பிராரத்த வாசனையாகும்.

இப்பிராரத்த வாசனை அறவே நீங்கியபோதுதான் அசத்தாகிய பிரபஞ்சத்தைக் கீழ்ப்படுத்தி மெய்யுணர்வு மேம்பட்டுநிகழும்; பிராரத்த வாசனை அறவே நீங்காத போது பிரபஞ்சத்தைக் கீழ்ப்படுத்தி, மெய்யுணர்வு மேம்பட்டு நிகழாது. ஆதலால் பிராரத்த வாசனை அறவே நீங்கும்பொருட்டு மெய்யுணர்வுடைய சிவபத் தர்களை நாடி வழிபட்டால் பிராரத்த வாசனை நீங்கி மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும். ஆதலால் அந்தச் சிவபத்தர்களை வழிபடுவாயாக என்று கூறி, பொருந்தா தென்ற அவர்களை மறுத்து உதாரணத்தால் ஏதுவை வலியுறுத்தருளினர் என்று உணர்க.

உதாரணம் வருமாறு :

வினையால் அசத்து விளைதலான் ஞானம்
வினைதீரின் அன்றி விளையா - வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும்
ஆனத்தால் அன்பின் தொழு.

என்பதாம்.

அசத்தாகிய பிரபஞ்சங்களை நிலைத்திராத தன்மை யுடையன என்று அறிந்து நீங்கியபொழுது வெளிப் பட்டுத் தோன்றும் சிவஞானம், அசத்தாகிய பிரபஞ் சங்கள் தோன்றுதலுக்குக் காரணமாகிய பிராரத்த வினை அறவே நீங்கியபொழுதுதான் நிலைபெறும். ஆதலால் பிராரத்த வினையை அறவேநீக்கிச் சிவ ஞானத்தை நிலைபெறச் செய்வதற்கு மெய்யுணர்வை நிலைபெறுத்திய சிவபத்தர்களிடத்தில் செய்யும் வழி பாடு இன்றியமையாது வேண்டப்படும் என்பது பெறப்பட்டது.

பிராரத்த வினையை அறவே நீக்கிச் சிவஞானத்தை நிலைபெறச் செய்வதற்கு ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி

உச்சரித்தலே போதியதாகும். ஆதலால் சிவபத்தர்களை வழிபடல் வேண்டுவதின்று என்று கொள்ளுதல் பொருந்துமெனின், அங்ஙனம் ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரித்தாலும் இந்த வழிபாட்டையின்றி அமையாது. ஆதலால் சிவபத்தர்களை வழிபடுதல் வேண்டும் என்க. இக்கருத்துப்பற்றியே ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரித்தலைக் கூறுமிடத்தில் 'அஞ்செழுத்தால்' எனவும், 'மண்முதல் நாளம்' எனவும் அகத்து வழிபாட்டையும் உடன் கூறியருளினர் என்று உணர்க.

அங்ஙனமாயின், ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரித்தலைக் கூறுகின்ற அதிகரணத்தையும் இதைச் சேரவைத்துக் கூறுதலே பொருத்தமெனின்; சிவப்பிரகாசம் திருவருட்பயன் முதலியவைகளினும் அஞ்செழுத்தருள் நிலையை இன்புறு நிலைக்குப் பிறகு அணைந்தோர் தன்மையைச் சேரவைத்துக் கூறியுள்ளமையினும் இதைச் சேரவைத்துக் கூறுதலே மிகவும் பொருத்தமானதாகும். ஆனாலும் சொற்கள் பலவாக விரியாதிருத்தற் பொருட்டும் அஞ்செழுத்து ஓதும் முறைமையை விதிப்படி என்று மாட்டேற்றினால் உணர்த்தற் பொருட்டும் ஒன்பதாஞ் சூத்திரத்தில் ஓதி அருளினர் என்று உணர்க.

விளையாது என்னும் அஃறிணை ஒன்றன்பால் வினைமுற்றினது விகுதி மறைந்து நின்றது.

பின்வந்துள்ள ஞானம் என்பது ஞானமுடையவர்களை உணர்த்தி நின்றது; ஆதலால் ஞானம் என்பது ஆகுபெயராகும். ஆனதனால் என்பது ஆனத்தால் என்று மருவிற்று.

இங்ஙனம் சிவஞானம் நிலைபெறுதற் பொருட்டுச் சிவபத்தர்களை வழிபடவேண்டும் என்று சாதித்த

பொழுது வேள்வி முதலியவைகளின் பயன் விரும்பாமையினாலும், பின்செய்து பயனைப் பெறுவோம் என்னும் எண்ணத்தினாலும் அவ்வேள்வி முதலியவைகளை விடுதல்போலச் சிவஞானம் நிலைபெறுதலாகிய பயன்கருதி விதிக்கப்பட்ட இவ்வழிபாட்டினை ஒரோவிடத்தில் விடலாமோ என்று சிலர் வினவ, முதல்வன் தன்னுடைய சிறப்பியல்பை அறியாது குருடாய்க் கிடந்த உயிருக்குப் பலவகையானும் தன்னுடைய சிறப்பியல்பைத் தெரியுமாறு உணர்த்தி மிகவுந்தாழ்ந்து எளிமையாக நின்ற அவ்வுயிரை மிகவும் உயர்ந்து அருமையாக நின்ற தான் (சிவம்) ஆகும்படி செய்தருளிய பெரிய உதவியை அறிந்த பிறகு மறந்தால் இங்ஙனம் மறந்ததனால் உண்டாகிய குற்றம் முன்பு முதல்வனுடைய உதவியை அறியாமையினால் மறந்த குற்றம்போல நீங்குந்தன்மையுடையது அன்று ஆதலாலும், இங்ஙனம் முதல்வன் உயிரைத் தானாம்வண்ணம் (சிவமாகும் வண்ணம்) செய்தாலும் இதுவரையிலும் தனக்கென்று சுதந்தரமில்லாது முதல்வனுடைய உபகாரத்தையின்றி அமையாததாய் அடிமையாயுள்ள உயிர் எப்பொழுதும் அடிமையாகவே உள்ளதாகும். ஆதலாலும் தானும் வண்ணம்செய்த பெரியோனை வழிபடுதலே அவ்வுயிர்க்கு வலிமையாம் என்று உணர்க என்று வழிபாட்டினை ஒருபொழுதும் விடலாகாது என்றும், விட்டால் குற்றமென்றும் கூறி ஏதுவை உதாரணத்தால் வலியுறுத்தருளினார் என்று உணர்க.

உதாரணம் வருமாறு :

தன்னை அறிவித்துத் தான்தானாச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது – முன்னவனே
தானேதா னாச்செய்தும் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

என்பதாம்.

தமது முதல்தானே (உயிர்களின் தலைவனே) குருவாக வருதலால் குருவுக்கும் முதல்வனுக்கும் வேறுபாடு இல்லாமையால் 'தான் தானச் செய்தானை' (சிவமாகச் செய்தானை) என்று கூறி அருளினர்.

முன்னர் மறந்த குற்றம் அறியாமையால் நிகழ்ந்தது ஆதலால் அக்குற்றம் நீங்குந்திறனுடையதாகும். அறிந்தபின் மறந்த குற்றம் நீங்குந்திறனுடையதன்று என்று விளக்கும் பொருட்டுப் 'பின்னை மறத்தல் பிழையலது' என்று கூறியருளினர். பின்னை மறத்தல் என்றதனுல் முன்னமே மறத்தல் பெறப்பட்டது. "எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (குறள்) என்னும் கருத்துப்பற்றிக் கூறியருளினர் என்று கொள்வதும் பொருத்தமுடையதாகும்.

பிழையலது என்று பாடம் கொள்ளாமல் பிழையலதும் என்று பாடங்கொண்டு இது பிழையாதலே அல்லாமலும் என்று உரை கூறுவாரும் உளர்.

செய்தால் என்பது செய்து எனத் திரிந்துநின்றது. தானச் செய்தும் என்பதிலுள்ள உம்மை தானச் செய்தலின் சிறப்பை உணர்த்தி நின்றது. ஆதலால் உயர்வு சிறப்பும்மையாகும்.

தான் தானச் செய்தலாவது: எந்தப் பொருளைச் சார்ந்ததோ அந்தப்பொருளாகநிற்கும் உயிர், தன்னை (சிவனை) அறிந்தபோது எண்குணங்களானிறைந்து தன்மயமாக (சிவமயமாக) நிற்கச் செய்தலாம். முதல்வன் இங்ஙனம் தன்மயமாக நிற்கச் செய்தபொழுதும் "உயிர் தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கும் உரித்தே" (சித்தி. சூ. 11: 10) அதாவது சிவமாகநின்ற உயிர் சிவாநுபவத்திற்கே உரியது என்பார் தைவம் என்றும்

தைவமே என்றூர். தைவம் என்பது தேவனுடைய உடைமை என்னும் பொருளேயுடைய வடமொழிச் சொல்.

மகான் என்னும் வடசொல் மான் எனத்திரிந்து நின்றது. மானே என்பதிலுள்ள இரண்டாம் வேற்றுமையுருபு மறைந்து நின்றது. அம்மான் என்று சுட்டை வருவித்து உரைத்துக்கொள்க. வலியைத் தருவதை வலி என்று கூறியருளினர்; இங்ஙனம் கூறுதலே உபசாரம் என்பர்.

இந்த மூன்று உதாரணங்களாலும் வழிபாட்டுக்கு இடத்து நிகழ் பொருளே (முதல்வனே) அல்லாமல் இடத்தினது விசேடமும் வேண்டும் என்று இடவிசேடத்தை வலியுறுத்தும் மூலமாக முதல் உதாரணத்தில் சிவலிங்கத்தையும், இரண்டாம் உதாரணத்தில் சிவபத்தர் வேடத்தையும், மூன்றும் உதாரணத்தில் சிவதேசிகர்களேயும் அறிந்து வழிபடும் முறைமை கூறப்பட்டுள்ளது.

இங்ஙனம் சிவாகமத்திலுள்ள ஞானபாதங்களின் பொருள்கள் எல்லாவற்றையும் பொதுவதிகாரம் உண்மையதிகாரம் (சிறப்பதிகாரம்) என்று இரண்டாகத் தொகுத்துப் பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியலென்று நான்காக வகுத்துப் போதிக்கும் இந்தச் சிவஞானபோத நூலேக் கேட்டற்குரிய அதிகாரிகள் யாவரென்று வினவ, முதல்வன் தன் வண்ணமாக (சிவமயமாக) செய்தபடியால் சீவன் என்னும் தன்மையினின்று நீங்கிச் சிவமென்று சொல்லப்படும் வேதாந்தத்தினது தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணுக்கனே! ஆணவமலத்தையுடைய விஞ்ஞானகலருக்கு அறிவின்கண் இருந்து அருட் பார்வையால் நோக்குதலினுலும் ஆணவம் கன்மம்

என்னும் இரு மலங்களையுடைய பிரளயாகலருக்குத் தேவகுருவாய் (தனது இயற்கைவடிவே குருவடிவாய்) முன்னின்று செய்யும் திருநோக்கம் பரிசம் வாக்கு என்று கூறப்படும் தீக்கையினாலும் பிறவிக்குக் காரணமாகிய பசுத்துவம் (மலத்தன்மை) நீங்கிச் சிவத்துவம் (சிவத்தன்மை) விளங்கும். ஆதலால் விஞ்ஞானகலருக்கும் பிரளயாகலருக்கும் வேறாகிய ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களையும் உடைய சகலருக்கே இவ்வுலகில் அநுபவமுடைய தேசிகரால் இச்சிவஞானபோதம் போதிக்கப்படும் என்று இச்சிவஞானபோதத்தைக் கேட்டற்குரிய அதிகாரிகளைக் கூறியருளினர். அச்செய்யுள் வருமாறு :

> சிவமென்னும் அந்ததர சிந்தைநேர் நோக்கப்
> பவமின்றாம் கண்வா சகத்தின் - சிவமுண்டாம்
> ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கிங் கொண்குருவால்
> இன்றிந்நூல் மும்மை மலர்க்கு.

என்பதாம்.

அந்தம் - வேதாந்தம். அந்ததரம் - சித்தாந்தம். இச்சித்தாந்தத்தைப் பெற்றவர்களுடைய பெருமையை கூறுவார் ' சிவமென்னும் அந்ததர' என்றார்.

எனப்படும் என்று வரவேண்டியது படுவிகுதி மறைந்து 'என்னும்' என்று வந்தது. சிந்தை என்பதற்கு அறிவு என்று பொருள் கொண்டுள்ளார். சிந்தையின்கண் என்று ஏழாம் வேற்றுமையுருபை விரித்து உரைகூறியுள்ளார்.

நேர் நோக்குதல், முன்னுள்ள மருட்பார்வையால் நோக்காமல் அருட் பார்வையால் நோக்குதல். நோக்க என்பதற்கு நோக்குதலால் எனப் பொருள் கொண்டுள்ளார்.

கண் வாசகங்களாகிய தீக்கைகளைக் கூறவே இன்னமாகிய பரிசமும் கொள்ளப்பட்டது.

பவம் என்பதற்குப் பிறவி என்று பொருள் கொள்ளாமல் பசுத்துவம் (மலம்) என்று பொருள் கொண்டுள்ளார்; ஆதலால் ஆகுபெயராம்.

இந்நூல் அநுபவமுடைய தேசிகரால் விளங்கும் தன்மையுடையது; அநுபவமில்லாதவர்களால் விளங்குந்தன்மை உடையதன்று என்று விளக்குவார் 'ஒண் குருவால்' என்றார்.

குருவால் என்பது போதிக்கப்படும் என்னும் சொல்லை விரும்பி நிற்கின்றது; ஆதலால் போதிக்கப்படும் என்பது வருவித்துரைக்கப்பட்டது. இங்ஙனம் வருவித்தலை அவாய் நிலையால் வந்தது என்பர்.

இன்றிந்நூலென்பது இந்நூல் என்னும் பொருளையுடையது. இக்காலத்து உரைக்கப்படும் நூல் என்று பொருள் கொண்டாலும் பொருந்தும் என்பது பின் வருகின்ற பாயிரத்தில் 'தான் உரைத்தான் இன்று' என்பதனுல் கொள்ளப்படும்.

மும்மை மலர்க்கு என்றவிடத்து மும்மை என்பது மூன்று தன்மையைக் குறிக்குமேனும் இச்செய்யுளில் மூன்று என்னும் எண்ணைக் குறித்து நின்றது. எது போல எனின், "தெரிமாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" என்றவிடத்து மும்மை என்பது மூன்று என்னும் பொருளைக்குறித்து நின்றவாறுபோலாம்.

இச்சூத்திரத்தினுலும் அதிகரணங்களினுலும் கூறி முடித்த தொகைப்பொருள்: பதினொராஞ் சூத்திரத்தால் அயரா அன்பின் அரன் கழல் செலுமென முத்திநிலை

கூறிமுடித்து அம்முத்தர், உடம்போடுகூடிச் சீவன்முத்த ராய் வாழுங்காலத்து அவருடைய அறிவு இச்சை செயல்கள் புறத்துச் செல்லுங்கால் மலத்தை நீக்குத லில் அறிவும், அன்பரொடு கூடுதலில் இச்சையும், திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழிபடுதலில் செயலும் செல்லுமென இச்சூத்திரத்தாற் கூறினர். கூறவே, அவற்றுள் முதலாவது செய்யவேண்டியது இதுவென்பதை அறிவித்தற்கு முதலதிகரணத்தால் விபரீத உணர்வைச் செய்யும் மும்மலங்களையும் களை தலே முதலாவது செய்யவேண்டுமெனக் கூறினர். கூறவே, மலநீக்கத்தை நிலைபெறச் செய்வதற்கு இரண்டாவதாகச் செய்யவேண்டியது இது என்பதை அறிவித்தற்கு இரண்டாமதிகரணத்தால் மலம் நீங்கப் பெற்ற முத்தர்களோடு இணங்க வேண்டுமென கூறினர். கூறவே, முத்தர்களோடு இணங்கிய இண கத்தை நிலைபெறச் செய்வதற்கு மூன்றாவதாகச் செய்ய வேண்டியது இதுவென அறிவித்தற்கு மூன்றும கரணத்தால் சிவபெருமான் வெளிப்பட்டு விளங்கு திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் என கண்டு வழிபடவேண்டுமெனக் கூறினர். கூறவே கூறிய மூன்றும் சீவன் முத்தர்க்கு இயல்பாயு வாகவும் செய்யவேண்டுமென விதியாகக் கூற எதற்காக என்பாரை மறுத்து ஒழிபு அதிகரணத் சிவபெருமான் எல்லாப் பொருளிடத்துங் கலப் அதுவாயும் பொருளின் தன்மையால் வேறாயும் நிற் ஆதலால் வேறாய் நிற்கும் தன்மைபற்றித் திருவே தினிடத்தும் சிவாலயத்தினிடத்தும் வழிபாடு நிகழ ஆதலின் வேறாய் நிற்குந் தன்மை பற்றியும் வழிப செய்ய வேண்டுமெனவும் அவ்வாறே மலங்க களைதலும் சிவபத்தர்களோடு இணங்குதலும் செ வேண்டுமெனவும் இவற்றால் அத்துவிதநிலை இ விளங்குமெனவும், ஞானத்தினாலேயே அத்துவிதநி

விளங்கினும் ஞானம் நிலைபெறுதற்கு இச்செயல்கள் அவசியம் வேண்டுமெனவும், இவைசெய்தல் கடமையெனவும், செய்யாதவிடத்து நன்றி மறத்தலாகிய குற்றமுண்டாமெனவும் கூறி விதியை வற்புறுத்தி இந்நூலுக்கு அதிகாரி சகல வருக்கத்து உயிர்களேயெனவும், இந்நூற்பொருளை உபதேசித்தற் குரியோர் அநுபவமுடைய தேசிகரே எனவுங் கூறினர்.

உண்மை அதிகாரம் - பயனியல் முற்றிற்று.

சிவஞானபோதம் உரைநடை முற்றிற்று.

---

## பாயிரம்

எந்தை சனற்குமரன்
ஏத்தித் தொழவியல்பாய்
நந்தி உரைத்தருளும்
ஞானநூல் — சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான்
தாரணியோர் தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தால் இன்று.

திருச்சிற்றம்பலம்



